# நீங்களும் இறை நேசர் ஆகலாம்

**ஆசிரியர் :**

ஹளரத் அல்லாமா மௌலானா **முஜத்தித் முஜ்த்தஹித்**

**ஷேஃக் அல்லாஹ்யார்ஃகான்** (ரஹ்)

தர்தீப் மற்றும் வெளியீடு :-

**அவைசியா திக்ர் மஜ்லிஸ் & பப்ளிஷர்ஸ்**

46 / 98, ஏழுகிணறு தெரு,
ஏழுகிணறு பூங்கா அருகில், சென்னை - 600 001.
செல் : 9444455962 / 8925873771



***BIBLIOGRAPHICAL DATA***

| | | |
|---|---|---|
| Title of the Book | : | Neengalum Irai Nesar Aagalam |
| Author | : | Hazrath Allama Moulana Mujaddith Mujthahid Sheikh Allah Yaar Khan (Rahma) |
| Language | : | Tamil |
| Ist Edition | : | 2005 - 1000 Copies |
| 2nd Edition | : | 2006 - 2000 Copies |
| 3rd Edition | : | 2008 - 2000 Copies |
| 4th Edition | : | 2011 - 3000 Copies |
| 5th Edition | : | 2015 - 3000 Copies |
| 6th Edition | : | 2018 - 4000 Copies |
| 7th Edition | : | 2019 - 2000 Copies |
| Used Paper | : | 80 gsm Maplitho |
| Book Size | : | 17.5 X 12 cm |
| Pages | : | 96 Pages |
| Price | : | Rs.50/- |
| Printer | : | NR. DHARANI PRINTERS<br>9B, Giri Gori Street,<br>Seven Wells, Chennai - 600 001.<br>Cell :99623 82601, 98400 84961 |
| Publishers & Copyright | : | Khalifa Muhammad Malick<br>Awaisia Majlis & Publishers<br>46/98, Seven Wells Street,<br>Chennai - 600 001.<br>Cell : 94444 55962<br>89258 73771<br>email : Khalifa-e-hind@hotmail.com |




## நுழைவாயில்;....

ஆசையால் ஆனவன் மனிதன். அவனது ஆசை எப்படி அமைகிறதோ. அப்படியே அவனது நம்பிக்கை அமைகிறது. அவனது நம்பிக்கை எப்படி அமைகிறதோ அப்படியே அவனது செயல்கள் அமைகின்றன. அவனது செயல்கள் எவ்வாறு அமைகின்றனவோ அவ்வாறே அந்த மனிதனும் ஆகிவிடுகின்றான்.

எந்த ஆசை ஆசைப்படக் கூடியது. எந்த ஆசை ஆசைப்படக் கூடாதது என்பதில் மனிதனுக்கு ஏகப்பட்ட குழப்பம். எது நியாயப் பூர்வமானது, எது அக்கிரமம் நிறைந்தது என்று முடிவெடுப்பதற்குக் கூட அவனால் இயலவில்லை. அதனால் ஆசை அலைகளில் துரும்பாக அல்லாடும் மனிதனுக்கு அவனது பல ஆசைகள் நிராசைகளாகி விடுகின்றன. சில ஆசைகள் அவனையே அழித்துவிடுகின்றன. இதனால் நிறைவு பெற்ற வாழ்க்கை வாழவேண்டிய மனிதன் குறைவு மிக்க வாழ்க்கையில் கிடந்து உழல்கிறான்: இன்பம் துய்க்க வேண்டிய மனிதன் துன்பத்தில் ஆழ்ந்து வேதனைப்படுகிறான்: சுகத்தில் திளைக்க வேண்டிய மனிதன் சோகத்தில் முக்கி முனகிக் கொண்டிருக்கிறான்



ஆசைகளின் பிறப்பிடமான மனதை அறிந்து. உணர்ந்து, அதனை ஒழுங்குபடுத்தி, சீரான நெறி நோக்கிச் செலுத்தி, ஆளுமை செய்வதில்தான் மனிதனின் வெற்றி இருக்கிறது.

தன்னை அறிந்தவன் தனது இறைவனை அறிவான் என்பது எம்பெருமான் நாயகம் (சல்) அவர்களது அமுதமொழியாகும். நம்மை அறிவதற்கும். அதன் வாயிலாக நம்மைப் படைத்தவனை அறிவதற்கும், நக்ஷ்பந்தியா - அவைசிய்யா அமைப்பு ஆழ்நிலைத் தியானத்தின் வழி உதவுகிறது.

தியானம் என்பது சுய அறிவை விளங்க வைக்கக் கூடியது; ஐம்புலன்களால் உண்டாகும் துன்பங்களிலிருந்து விலகுவதற்கு வழி காட்டக்கூடியது: மனம் ஒரு விஷயத்தில் தங்கு தடையின்றி நிலைத்து நிற்கக் கூடிய சக்தியைப் பெற்றுத் தர வல்லது: அமைதிப் பண்பை அளிக்கவல்லது; அழகு கூடச் செய்ய வல்லது; துன்பங்களின் நிவாரணியாக விளங்கக் கூடியது. இவற்றைப் படித்தறிந்தவர்கள் தியானக் கூடங்களில் திரளாகக் குவிகின்றனர். திரளுகிற அந்தக்கூட்டத்தினர் தியானத்தின் முழுப் பலனையும் அடைகின்றார்களா என்பது கேள்விக்குறியே ஆகும். தியானம் என்பது எளிதானது. ஆனால் பலரும் இதைக் கடினமாக்கி விடுகின்றனர். இதனால் பொதுவாக தியானத்தில் பெறவேண்டிய தெளிவை, அடைய வேண்டிய வெற்றியைப் பலர் அடைவதே இல்லை. மிக அரிதாக

அடையும் ஒரு சிலரும். தான் பெற்ற ஒரு நிலையிலேயே நின்று விடுகின்றனர் அல்லது திரும்பிவிடுகின்றனர். அவர்கள் அடுத்தடுத்து இருக்கும் உயர்ந்த நிலைகளுக்குச் செல்லாமலேயே இருந்து விடுகின்றனர்.

பலப் படித்தரங்களைக் கொண்ட தியானக் கலையின் படிகளில் ஏறாமலேயே வழுக்கி விழுந்தோர் ஏராளம்; பாதி வழியிலேயே அல்லது ஆரம்ப நிலையிலேயே நின்று விடுவோர் ஏராளம். இவ்வாறில்லாமல் நக்ஷபந்தியா அவைசிய்யா அமைப்பு முழுமையான ஆழ்நிலைத் தியானத்தைப் பயிற்றுவிக்கிறது. இம்மையை மட்டுமே கருத்தில் கொள்ளாமல், இம்மை, மறுமை இரண்டையுமே கண்ணும் கருத்துமாகக் கொண்டு செயல்பட்டுச் சிறப்படையச் செய்கிறது. ஒரு மனிதனின் அகம், புறம் இரண்டையும் தூய்மைப் பெறச் செய்து வலிமை பெற வைப்பதோடு, இவ்வுலக வாழ்விற்கு அப்பாலும் அவன் பெற வேண்டிய சிறப்புக்காகவும் இந்த அமைப்பின் ஆழ்நிலைத் தியானம் வழிகாட்டுகிறது. தனிமனித நலனோடு சமுதாய நலனுக்காகவும் தக்கன செய்ய ஆழ்நிலைத் தியானம் தூண்டுகிறது.

ஒருவன் எண்பதாண்டுகள் இவ்வுலகில் இருப்பதாக வைத்துக் கொள்வோம். அதாவது 29200 நாட்கள் இவ்வுலகில் அவன் இருக்கிறான் எண்ணிப்பாருங்கள். ஒரு நாளைக்கு ஒரு பாவம் என்று வைத்துக் கொண்டாலும், எத்தகைய பாவ மூட்டையை அவன் சுமக்க வேண்டியுள்ளது!



உங்கள் வார்த்தைகளும்,செயல்களும், நியாயத் தீர்ப்புநாளில் தராசில் நிறுத்திப் பார்க்கப்படுவதற்கு முன் இப்போதே அவற்றை நன்கு நிறை போட்டுப் பார்த்து விடுங்கள் என்று ஃகலீஃபா உமர் (ரலி) கூறியுள்ளார். அத்தகைய நிலையில் பொய்மையில் இருந்து உண்மைக்கு, இருளில் இருந்து ஒளிக்கு இட்டுச் செல்கிற வகையில் மரணத்திற்குப் பின் தனக்கு நன்மை பயப்பதை இப்போதே செய்பவன் பாக்கியவான் என்ற பெருமானார் நபி (சல்) அவர்களது வாக்குக் கேற்ப ஆழ்நிலைத் தியானம் அமைந்து விளங்குகிறது.

இன்னொன்றையும் சிந்தித்துப் பார்க்கலாம். செய்கின்ற பாவங்கள் புலப்படுகின்றன: இறைவனிடம் மனம் கசிந்து மன்னிப்புக்காக மன்றாடுகின்றோம். விரயமாகிவிடப் போகிற இந்த வாழ்வுக்குப் பின்னால் அளப்பரிய அருள் கொண்டு இறைவன் நம்மை மன்னித்து விடலாம்: ஆனால் அங்கே நமது நிலை என்ன? மன்னிக்கப்பட்டோர் வரிசையில்தான் நாமும் நிறுத்தப்படுவோமேயன்றிச் சிறப்புமிக்க நேர்மையாளர்களின் அணியில் மாண்புற வைத்துக் கௌரவிக்கப்படமாட்டோமல்லவா? ஆகவே, பாவ காரியங்களிலிருந்து விலகி விடுவது மட்டுமல்ல. இறைவனின் இனிய நேசிப்புக் குரியவராகவும் மாட்சிமை பெறவேண்டியது அவசியமல்லவா? அத்தகைய உன்னத நிலைக்கு நம்மை அழைத்துச் செல்லும் உயரிய வழியை நக்ஷ் பந்தியா அவைசிய்யாஅமைப்பின் ஆழ்நிலைத் தியானம் எடுத்துக்காட்டிச் செயல்படுத்தச் செய்கிறது.



ஃகலீஃபா உமர் (ரலி) அவர்கள் ஒருமுறை மக்காவிற்கு அருகில் பயணித்துக் கொண்டிருந்தபோது ஓர் அடிமைச் சிறுவன் ஆடு மேய்த்துக் கொண்டிருப்பதைக் கண்டார்கள். அச்சிறுவனிடம் சென்று ஓர் ஆட்டினைத் தனக்கு விலைக்குத் தரும்படியாகக் கேட்டார்கள். அதற்கு அந்தச் சிறுவர் ஆடுகள் என்னுடையவை அல்ல; எனது முதலாளிக்குரியவை என்றார். அவரைச் சோதிக்க விரும்பிய ஃகலீஃபா. ஓர் ஆட்டினை எனக்கு விற்றுவிடு: முதலாளி கேட்டால் ஓநாய் ஆட்டினைப் பிடித்துச் சென்றுவிட்டதாகக் கூறிவிடு: உண்மைதான் அவருக்கு தெரியாதே! என்றார்கள் உடனே அந்தச் சிறுவர். என் முதலாளிக்குத் தெரியாது; ஆனால் இறைவனுக்குத் தெரியுமே! என்றார். அந்த வார்த்தையைக் கேட்ட ஃகலீஃபா அகமகிழ்ந்து அவரது முதலாளியை அழைத்துவரச் செய்து, தக்கத் தொகை தந்து, அந்த அடிமைச் சிறுவனுக்கு விடுதலை வாங்கித் தந்தார்கள்.

இறைவன் நம்மைப் பார்த்துக் கொண்டிருக்கிறான் என்று சதாக் காலமும் இடையறாது ஓடிய ஓர் உணர்வு அல்லவா அந்தச் சிறுவனை அவ்வாறு கூறவைத்தது. எனவே தூசிகளில் மூடப்பட்டிருக்கும் கண்ணாடியைப்போல் வெறும் குப்பைகளால் நிறைந்திருக்கும் மனதைத் தூய்மைப்படுத்துவதோடு மட்டுமல்ல. அதற்குமேல் வேறு தூசிகள் வந்து படியாமல் பார்த்துக்



கொள்வதற்கும் இந்த உணர்வு அவசியமானதல்லவா! இந்த நிலையைப் பெறுவதற்கு இவ்வமைப்பின் ஆழ்நிலைத் தியானம் துணை புரிகிறது.

இந்தத் தியானத்தில் ஈடுபடுவோரைத் தீமைகள் அசைத்து நிலைகுலைய வைப்பதில்லை. மாறாக அத்தீமைகள் அமைதியாக அகற்றப்படுகின்றன. இந்தத் தியானத்தில் ஈடுபடுவோரைப் பாவங்கள் எரிப்பதில்லை. மாறாக அப்பாவங்கள் அறிந்து தடுக்கப்பட்டுவிடுகின்றன.

இறை உவப்புக்கேற்ற நிறைவான வாழ்வை மனிதன் பெறக்கூடிய சிறப்புமிக்க அன்பின் இயக்கமான ஆழ்நிலைத் தியானத்தை அகிலத்திற்கு அறிமுகப்படுத்திய நக்ஷ்பந்தியா வழிமுறையை ஆப்கானிஸ்தானிற்கு வடக்கே ஃபுஃகாரா எனும் ஊரைச் சார்ந்த ஃகாஜா நக்ஷ்பந்த் (ரஹ்) அவர்களால் ஹிஜ்ரி எட்டாம் நூற்றாண்டில் தோற்றுவிக்கப்பட்டது. நக்ஷ்பந்தியா வழிமுறையின் ஒரு பிரிவே அவைசிய்யா அமைப்பாகும். இதன் தற்போதைய தலைவராக ஹள்ரத் மௌலானா முஹம்மது அக்ரம் அவான் அவர்களின் மகனார் அப்துல் கதீர் அவான் விளங்குகிறார்கள். இதன் தலைமைச் செயலகம் முனாராவில் அமைந்துள்ளது. நக்ஷ்பந்தியா – அவைசிய்யாவின் கிளைகள் உலகம் முழுவதும் பரந்து பரவியுள்ளன. இதன் ஒரு கிளை சென்னையில் ஃகலீஃபா முஹம்மது மாலிக் அவர்களைக் கொண்டியங்கி வருகின்றது. இந்த ஆழ்நிலைத் தியானப் பயிற்சி நன்முறையில்

பயிற்றுவிக்கப்பட்டுவருகிறது. சீரிய நோக்கில் சிறந்த பணிகள் பல ஆற்றிவரும் ஃகலீஃபா முஹம்மது மாலிக் அவர்கள் பாராட்டுதலுக்கும், வாழ்த்துதலுக்கும் உரியவராகத் திகழ்கின்றனர்.

பேராசிரியர் ஹாபிள் அப்துர் ரஜாக் எம்.ஏ., (ரஹ்) அவர்களால் மிக அழகிய முறையில் தொகுக்கப்பெற்ற இதயத்தைப் பக்குவப்படுத்திப், பலப்படுத்தும் அழகிய நூலே இங்கு நீங்களும் இறை நேசர்களாகலாம் என்றத் தலைப்பில் தங்கள் கரங்களில் தவழ்கின்றது.

ஆர்ப்பாட்டமாகக் கூடி, ஆரவாரமாகக் கொக்கரித்துக் காற்றிலே கரைந்து போகிற அல்லது போகிற போக்கில் கொஞ்சம் பொழுதைப் போக்கப் படித்து வீசி எறிகிற வார்த்தை வியாபாரம் இந்த நூலின் நோக்கமல்ல.

வாழ்க்கையை முழுமையாக உணர்தல் வேண்டும்; நம்மையும், நம்மைப் படைத்தவனையும் நன்குணர்தல் வேண்டும்: படைத்தவனின் திருப் பொருத்தத்திற்கு உரியவராகி மறுமையில் சிறத்தல் வேண்டும்: இம்மையில் மாண்புறச் செயல் புரிந்து தமக்கும் தம்மைச் சார்ந்த மனித சமுதாயத்திற்கும் அரும்பணி ஆற்றி உயர்கிற உத்தம நட்பை அன்றாடச் செயல்பாட்டில் கொணர்தல் வேண்டும் – இவையே இந்த நூலின் அடிப்படை நோக்கங்களாகும்.



எனவே வாசகர்கள் இந்நூலைப் படிப்பதோடு நிறுத்திவிடாமல் நக்ஷ்பந்தியா – அவைசிய்யா அமைப்போடு தொடர்புகொண்டு, எல்லாம் வல்ல இறைவனின் நேசத்தையும், நெருக்கத்தையும் தரக்கூடிய ஆன்மீகப் பயிற்சியையும் மேற்கொண்டு எல்லா நலனும் – வளமும், இம்மை – மறுமை இரண்டிலும் இறையருளால் பெற்றுத் திகழவேண்டும் என்றுவிழைவோடு நூலுள் நுழையும் தங்களை வாழ்த்தி வரவேற்கிறோம்.

**பேராசிரியர் டாக்டர்**
**சே.மு.மு. முஹமதலி,** M.A., Ph.D.



## முன்னுரை

உலகத்தில் உள்ள படைப்புகளில் புற்பூண்டுகளிலிருந்து காண அதிசயத்தக்கப் படைப்பினங்கள் வரை எல்லாம் வல்ல "அல்லாஹ்" மனிதனை அதற்கு அதிகாரியாக மட்டுமல்லாமல் தன்னுடைய ஃகலீஃபாவாக மிக உயர்ந்த அந்தஸ்திலானப் பதவியையும் கொடுத்து மனித உடலுக்கு தன்னுடைய பரிசுத்தமான ஒளியைச் செலுத்தி இம்மண்ணுலகத்தில் இருக்கும் காலம் வரை ரூஹை சிதையாமல் அதைப்பக்குவப்படுத்தி, பலப்படுத்தி அதன் மூலமாக "அல்லாஹ்" விடம் எந்நேரமும் தொடர்பில் இருக்க வேண்டும் என்ற நியதியை உருவாக்கினான். மேலும் நீண்டகால வணக்க வழிப்பாடுகளில் தீவிரம் காட்டிய ஷைத்தானை நம்முன் நிறுத்தி முடிந்தால் மனிதர்களை வழிகெடுத்துப்பார் என உத்தரவிட்டான். இதைக் "குர்ஆனில் குறிப்பிடும் போது ஷைத்தானுடைய அடிச்சுவட்டை பின்பற்ற வேண்டாம்" என்று நம்மை எச்சரிக்கவும் செய்தான்.

நம்முடைய இதயம் இருளாக இருந்தால் அதை ஷைத்தான் தன்னுடைய குடியிருப்பாக அமைத்துக்கொள்கிறான். ஆதலால் அல்லாஹ் குர்ஆனில் (சூரா : அஃலா : 81–14) தன்னுடைய இதயத்தைப் பரிசுத்தம் செய்தவர் வெற்றி பெற்றார் என்று சொல்வது மட்டுமல்லாமல் அதை எப்படி சுத்தம் செய்வது என்பதையும் அடுத்து விவரிக்கின்றான். அவர்கள் இதயம் எந்நேரமும் (இறைத் தியானம்) திக்றுகளில் மூழ்கி இருப்பார்கள் என்றும்; இதனால் இதய



வெளிச்சம் அதிகமாகிப் பிரகாசித்த உடன் எப்பொழுதும் பிரகாசித்துக் கொண்டு இருக்கும் அல்லாஹ்வை வணங்க உத்தரவிடுகிறான். மனிதனுடைய படைப்பின் சாராம்சமும் இதுதான்.

ஆனால் இன்றையக் காலகட்டத்தில்அரபு நாடுகளில் இருந்து அஜமிகள் வசிக்கும் நம்முடைய மண்வாசனை வரை ரூஹைப் (ஆன்மா) பற்றியோ அதன் பயிற்சி, அதன் உணவு, அதனுடைய பலம். அதனுடையத் தொடர்பு இதைப்பற்றியக் கல்வி கிடைப்பதில்லை.

ரூஹ் என்பதுதான் அசலான மனிதன். இதன்மூலமாக கிடைக்கக்கூடியக் கல்வியை இது இஸ்லாத்தில் இல்லாத கல்வி என்றும் இதைப்பற்றிப் பேசுபவர்கள் பகிரங்க வழிகேட்டில் இருப்பதாக ஷைத்தானின் உதவியுடன் பொய் பிரச்சாரம் செய்யும் இக்கூட்டங்கள் இன்று வளர்ச்சியடைந்து வருகின்றன. இவர்கள் அறிவுக்குருடர்கள் மட்டுமல்ல, இதயப் பார்வையும் அற்றவர்கள்.

பல வித்தியாசமான நம்பிக்கைளில் செயல்பட்டுவரும் இக்கூட்டத்தினர் அகப்பார்வையோடு வாழ்ந்த நமது முன்னோர்களையும் தற்பொழுது வாழ்ந்து கொண்டிருக்கும் (உலமாயெஹக்) சூஃபியாக்களையும் வழி தவறி விட்டனர் என்று கூறுவது விந்தையிலும் விந்தையானது.

மெஞ்ஞானத்தைப் புறக்கணித்து வெளிரங்கக் கல்விகளிலே மட்டும் கவனம் செலுத்தி வரும் இவர்களிடம் இந்த நம்பிக்கை உள்ள சுன்னத் வல்ஜமாத்தாரிடமும்

இந்த கல்வி இல்லாதது வருந்தத்தக்கது. அகமிய கல்வி இல்லாத வேதனைக்குரிய காலக்கட்டத்தில் நாம் இன்று இருக்கிறோம்.

இதனால் இறைநேசர்களை நேசிப்பவர்கள் அவர்களிடம் யாசிக்கிறோம் என்ற பெயரில் தாங்கள் செய்வது சரி என்றும் கபுரை இடிக்க வேண்டும் என்று முழங்குபவர்கள் மற்றொரு பக்கம் இருக்க இந்த இரண்டிலும் இல்லாத மூன்றாவதாக உள்ள ஒருக் கூட்டம் எண்ணிகையில் அதிகமானவர்கள். இதில் ஆச்சரியம் என்னவென்றால்

இந்த அனைத்து கூட்டங்களிலும் உலமாக்களும் உள்ளனர். மேடை பேச்சிலிருந்து நூல்கள் புனைவது வரை இவர்கள் காட்டும் வேகம் தஜ்கியா, சுலூக், மஃரிஃபத், ரூஹ் என்னும் நிலை வரும்பொது இவர்களும் பலவீனமடைந்து விடுகிறார்கள். ஆக வெளிரங்கக் கல்வியின் சான்றிதழ் உள்ளவர்களில் இருந்து கல்வி அறிவில்லாத கூட்டம் வரை இதயம் என்ற ரூஹின் வலிமை இழந்து உடலுக்குத் தேவையான இச்சைகளை பூர்த்தி செய்வதுடன் வணக்கம் என்ற பெயரில் இதயம் ;(ரூஹ்) ஒத்துழைக்காத அவல நிலையும், நடைமுறையில் மூமின்கள் என்ற பெயரில், பலமிழந்த நிலையிலும் நாம் இன்று நம்முடைய சமுதாயத்தை காண்கிறோம்.

இஸ்லாம் பெற்ற வெற்றிகள் சரித்திரத்தை சற்றே நாம் புரட்டிப்பார்த்தோமேயானால் ரூஹில் (இதயம்) வலிமை பெற்ற மேன்மை தங்கிய நபிகளுக்கெல்லாம் அரசராகிய



முஹம்மது ரசூலுல்லாஹ் (சல்) மற்றும் அவர்களின் தோழர்கள். தாபியீன்கள்.தபஅத் தாபியீன்களிலிருந்து சூஃபியாக்கள் வரை இஸ்லாமிய ஆட்சியையும் முஸ்லிம் சமுதாயத்தையும் ஏறெடுத்துக் பார்க்கக்கூடத் திராணியற்றவர்கள், இன்று இஸ்லாமிய சமுதாயத்தைக் கிள்ளுக்கீரையாகப் பார்க்கும் காரணம் என்ன? தன்னை அறிந்தவன் தன்னுடைய இறைவனை அறிந்தான் என்ற நிலைக்குப் புறம்பாக தன்னை மறந்தவன் தன்னுடைய இறைவனையும் மறந்தான் என்ற நிலைக்கு நம்முடைய சமுதாயம் தள்ளப்பட்டுள்ளது, இறைவன் நம்முடன் இருக்கிறான் என்ற பலம் முஸ்லிம்களுக்கு வெற்றியைத் தேடித்தந்தது. ஏனென்றால் எங்கு இறைவனுடைய நெருக்கத்தை மனிதன் உணருகின்றானோ அங்கு குழப்பம் விளைவிக்கும் ஷைத்தானுக்கு இடமில்லை, நாம் இறைவனிடத்தில் இருந்து தூரமானோம். ஷைத்தான் நம்மிடத்தில் இருந்து நம்மவர்களையே தூரமாக்கினான்.

மவ்லானா அஷ்ரஃப் அலி தானவி (ரஹ்) அவர்களிடத்தில் ஒருவர் வினவுகிறார். இறை நேசர்களை அவமதிப்பதும் அவர்களைப் பற்றி குதர்க்கம் செய்பவர்களையும் காஃபிர்கள் என்று கூறலாமா அதற்கு மவ்லானா அவர்கள் காஃபிர்கள் என்று கூறுவதற்கில்லை. ஆனால் நிச்சயமாக குஃப்ரிலே இறக்கிறார்கள் என்று பதிலளித்தார்கள். மிகப்பிரபலமான பெரியார் அன்வர்ஷா கஷ்மீரி அவர்கள் கூறுகின்றார்கள். நாம் ஏன் சூஃபியாக்கள் காலடியில் அமர்கிறோம் என்றால் அவர்களிடம் (ஆலமே பர்சஃஹ்)



கல்லறை வாழ்க்கை (நிலைகளை) பார்க்கக்கூடிய வலிமையை அல்லாஹ் அவர்களுக்கு அளித்திருக்கிறான்.

ஹதீசுக் கலையில் இமாம் புஃகாரி, இமாம் அபுதாவூது, இமாம் திர்மிதி, இமாம் நசஇ, இமாம் பைஹக்கி இவர்களுடைய பரிசுகளை வெளியிடுகிறோம் என்ற பெயரில் எஹ்சான், தஜ்கியா, சுலூக் இவர்களை மறைத்து வெளிரங்க அமல் சம்மந்தப்பட்டவைகளை அறிவித்து மக்களை இவர்களும் இருட்டில் வைத்துவிட்டனர். நம்மைச் சுற்றியுள்ள இஸ்லாமிய அமைப்புகள் எல்லாம் ஷைத்தானிடம் சரணடைந்துவிட்ட அரசியல் கட்சிகள் போல் ஆகிவிட்டன. தங்களுக்கு எனத் தனிக்கொள்கை, தனித்தோற்றம், ஒரு பிரிவினர் அவுலியாக்களை நேசிக்கிறோம் என்ற பெயரில் சடங்குகளையும், மற்றொரு பிரிவினர் அதை ஷிர்க் என்றும் சடங்குகளை எதிர்க்கிறோம் என்றும் ஹக்கை விட்டு தூரமானார்கள். மேலும் இவர்கள் சுவர்க்கத்திற்கு அனுமதிச் சீட்டு தருகிற அதிகாரிகளாகத் தங்களைக் காட்டிக் கொள்கின்றனர்.

மற்றொரு பிரிவினர் தொழுகையையும், ஷரியத்தையும் தானே போதிக்கிறோம் என்று கூறி திக்ருல்லாஹ்வில் ஈடுபட விரும்புவர்களை நீங்கள் தனித்துவிடுவீர்கள் என்ற விஷ விதையையும் விதைக்கிறார்கள். “அல்லாஹ்”வின் பிரதிநிதிகளாக நியமிக்கப்பட்ட இவர்கள் ஷைத்தானின் பிரதிநிதிகளாக செயல்படும் போது “அல்லாஹ்”வுக்குமாறு செய்கிறோம் என்பதை உணர்வதில்லை.

ஒவ்வொரு கூட்டங்களிலும் அதைப்பின்பற்றுபவர்கள் தங்களது தலைவனையும் தலைவனின் கொள்கையைத்தான் வணங்கிக் கொண்டு இருக்கிறார்களே தவிர, இறைவனை



வணங்குவது என்பது இரண்டாம் பட்சமாகிவிட்டது. இன்று இந்த மெய்ஞானக் கல்வியை புறக்கணித்துவிட்டு வெளிரங்கக் கல்விகளிலே மட்டும் கவனம் செலுத்தி வரும் வேதனைக்குரியக் காலக்கட்டத்தில் இந்தக் கல்விக்கு முன்னுரிமை அளித்து மக்களுக்கு இதயப் பரிசுத்தத்தையும், அதன்பின் ஷரீஅத்தைப் பின்பற்றக்கூடிய இன்பமும், ரூஹின் மூலமாக சுலூக் என்னும் ஞானப்படித்தரங்களைக் கடக்கவைத்து நாம் இந்த நோக்கத்திற்காகத்தான் இந்த உலகத்திற்கு வந்தோம் என்ற எண்ணத்தை உருவாக்குவதிலும், “அல்லாஹ்”வின் தாத்பரியத்தைப்பற்றியும் அர்பஅ அனாசிர் என்னும் மனிதப் படைப்பை பற்றியும், நம்முடைய ரத்த நாளங்களில் ஓடிக்கொண்டிருக்கும் ஷைத்தானின் செயல்முறை பற்றியும், மேலும் நமக்குள் குடியிருக்கும் அசலான மனிதனின் ரூஹைப் (இதயம்) பற்றியும், அதனுடைய சிறப்பு, அதனுடைய பலம். இதய வெளிச்சம் இறைவனின் தர்பாரை சென்றடையக்கூடிய வழிமுறைகளைப் பற்றியும் சிறந்த முறையில் நாம் விளங்கிக்கொள்ளவேண்டும். மேலும் இஸ்லாம் நமக்கு வழங்கி இருக்கும் மிகப்பெரிய செல்வமும் இதுதான்.

இந்த செல்வத்தை விட்டு ஷைத்தானுடைய தோழர்களாகவும், தன்னில் உள்ள ஜோதி ரூஹ் (இதயம்) என்பதும் தன்னை அறிவது தன்னில் உள்ள ரூஹை அறிந்து கொள்வதும் அதன் மூலமாக “அல்லாஹ்”வை அறிந்து கொள்வதுமாகும். மனிதனை “அல்லாஹ்” உலகில் மனிதனைப் படைத்த நோக்கமும் இதுதான். ஆனால் இன்றைக்கு பலவித பெயர்களில் செயல்பட்டுக் கொண்டு வரும் கூட்டங்களும் தரீக்கா என்ற பெயரில் பலபெரியோர்களின் பெயர்களை முன்னோடியாகக் கொண்டு செயல்படும் அமைப்புகளும் வெளிரங்கக் கல்வியின்

சான்றிதழோடு வலம் வரும் உலமாக்களும் ஈமான், இஸ்லாம் என்ற நிலையில் மட்டும்தான் இவர்களின் கல்வியும், பிரச்சாரமும் உள்ளது இஸ்லாம் என்ற வட்டத்தில் ஈமான், இஸ்லாம் என்பது உடலாகவும். மூன்றாவது பகுதியான இஹ்சான் ரூஹாகவும் அமைந்துள்ளது. ரூஹ் இல்லாவிட்டால் உடலை எப்படி நாம் சவம் என்று குறிப்பிடுகிறோமோ. அதே நிலைதான் இன்று நம்முடைய இஸ்லாமிய சமுதாயம் உள்ளது.

இந்த இஹ்சான் பகுதியை தஜ்கியா, சுலூக், மஃரிஃபத், மனக்கட்டுப்பாடு, இதயப் பரிசுத்தம் என பல வண்ணங்களில் பெயர் சூட்டப்பட்டாலும் உண்மையில் மிகவும் அத்தியாவசிமான அமல்களில் இதுவும் ஒன்றாகும். ஆதலால் அன்பர்கள் இந்த வழிமுறையின் தெளிவை இந்நூலில் விரிவாகக் கூறப்பட்டிருப்பதால் நூலை படிப்பதோடு மட்டுமல்லாமல் ஆன்மீகப் பயிற்சியும் பெற அன்புடன் அழைக்கிறோம்.

இங்ஙனம்
அன்புடன்
அவைசியா மஜ்லிஸ்
46/98, ஏழுகிணறு தெரு,
ஏழுகிணறு பூங்கா அருகில்,
சென்னை – 600 001.



"பிஸ்மில்லாஹித் தஆலா"

திக்ரே ஃகல்பி மற்றும் முராக்கபா சம்பந்தமாக
முஃப்திகள் வழங்கிய ஃபத்வா

கீழ்காணும் விஷயத்திற்கு மார்க்க அறிஞர்கள் வழங்கும் தீர்ப்பு என்ன ? சில்சிலா நக்ஷபந்தியா அவைசிய்யாவின் தற்போதைய தலைவரான ஷைக் அமீர் முஹம்மது அக்ரம் அவான் அவர்கள் உலகம் முழுவதிலும் வாழ்கின்ற தனது லட்சக் கணக்கான சீடர்களுக்கு இதயபரிசுத்தத்திற்காக திக்ரே ஃகல்பினை பயிற்சி அளித்து வருகிறார்கள். முஸ்லீம்கள் குர்ஆன் ஹதீசை பின்பற்றுவதுடன் ஏதேனும் தரீக்காவின் ஷைஃகிடம் தொடர்பு வைப்பது மார்க்க ரீதியில் பயன் தருமா ?

திக்ரே கல்பியின் செயல்முறை :

முழு மனஓர்மையுடன் கவனத்துடன் உள்ளிழுக்கின்ற வெளிவிடுகின்ற மூச்சினை இவ்விதமாக நினைக்க வேண்டும். அதாவது உள்ளிழுக்கும் சுவாசத்துடன் இஸ்மு தாத் எனப்படும் "அல்லாஹ்" என்பதை ஆழ்மனதில் இறங்குவதாக கருத வேண்டும். வெளிவருகின்ற சுவாசத்தை ஹு என்று வெளியேறுவதாக நினைத்து எந்த லதீஃபாவில் (நுன்பொருள்) திக்ர் செய்யப்படுகின்றதோ அதன் மீது வேகமாக அடிக்க வேண்டும்.

வஃபில்லாஹித் தவ்ஃபீக் : சில்சிலா நக்ஷபந்தியா அவைசிய்யாவில் உள்ரங்கத்தை சீர்திருத்த திக்ரே ஃகல்பீ மற்றும் முராக்கபா செய்விக்கப்படுகிறது. அவர்கள் சில்சிலா சிஷ்தியா செய்கின்ற



வெளிரங்க திக்ரை செய்வதில்லை. திக்ரின் இந்த இருவழிமுறைகளும் சரியானவையே ! இவ்வாரு வழிமுறைகளின் நோக்கம் ஆன்மாவை பரிசுத்தப்படுத்துவதும் சுன்னத்தை பின்பற்றுவதேயாகும். அதுமட்டுமன்றி தீயகுணங்கள் அகற்றி நற்குணங்கள் உருவாக்குவதுடன், அல்லாஹ்வுடனான தொடர்பை உறுதிபடுத்துவதாகும். நக்ஷபந்தியாவில் வலியுறுத்தப்படுகின்ற திக்ர் முராகபா போன்றவைகளை நன்கு தேர்ச்சிபெற்ற சுன்னத்துகளை பின்பற்றுகின்ற அறிஞர்கள் தலைமையிலும், கண்காணிப்பிலும் செய்ய வேண்டும். அத்துடன் அவர் மக்களின் அகமிய பரிசுத்தத்தில் அனுபவம் வாய்ந்தவராகவும் இருக்க வேண்டும்.

இதுமட்டுமின்றி இந்த திக்ரை, முராகபாவை கற்றறிந்து அறிஞர்கள் உறுதியான கொள்கை கோட்பாடு உடைய யாவரும் செய்து வரவேண்டும்.

ஹபீபுர்ரஹ்மான் உஃபியஅன்ஹு
முஃப்தி தாருல் உலூம் தேவ்பந்த்
பதில் சரியானதே
முஃப்தி மஹ்மூத் ஹஸன் புலந்த் ஷஹ்ரீ
முஃப்தி முஹம்மத் நுஃமான் சீதாப்பூரி



"பிஸ்மில்லாஹித்தஆலா"

கண்ணியம் நிறைந்த மவ்லானா அப்துல் ஹக் (ரஹ்)
அவர்கள் ஷைஃகுல் ஹதீஸ் தாருல் உலூம் தேவ்பந்த்.

நஹ்மதுஹு வநுஸல்லி அலா ரசூலிஹில் கரீம்

ரூமூஸே தில் விளக்கவுரையான குனூஸே தில்

எனது பார்வைக்கு வந்தது. "அல்ஹம்து லில்லாஹ்"

அனைவரும் பயன்பெறக் கூடிய வகையில் அமைந்துள்ளது.

இந்த எளியவனின் வேண்டுகோள் யாதெனில்

ஒவ்வொரு முஸ்லிமும் இந்நூலின் மூலம் பயன்பெற்று

செயல்படவேண்டும். என்பதே !!

இந்நூலின் மூலம் எண்ணற்ற
பலாபலன்கள் கிடைத்திட வேண்டும் என்று துஆ
செய்கிறேன் ஆமீன் !!

எளியவன்
(23 ரபீயுஸ்ஸானி 1434) அப்துல் ஹக் ஊழியர் தாருல்
உலூம் தேவ்பந்த்
சரிபார்த்தவர் : ஜம்ஷேத் அலி

**உவைசியா சில்சிலாவின் திக்ர், முராக்கபாவின் வழிமுறைகள் ஷரியத்துக்கு உட்பட்டவையே.**

**தாருல் உலூம் தேவ்பந்த் மதரஸா முஃப்திகளுடைய ஃபத்வா**



## அறிமுகம்

**சில்சிலா நக்ஷ் பந்தியா அவைசியா**

**ஆழ்நிலை தியானப் பயிற்சி மையம்**

அஸ்ஸலாமு அலைக்கும் (வரஹ்)

பிஸ்மில்லா ஹிர்ரஹ்மா னிர்ரஹீம்

நஹ்மதுஹு வநுசல்லி அலா ரசூலிஹில் கரீம் அம்மா பஃது

இப்பரந்து விரிந்த பூமியில் எல்லாவற்றையும் மிகைத்தவனான “அல்லாஹ்” தன்னுடைய அடியார்களுக்கு அவனை அறியவும், அவனளவில் நெருங்கவும் சில வழி முறைகளை ஏற்படுத்தியிருக்கிறான். அதில் சட்டதிட்டங்களையும் தகுதி தராதரங்களையும் விதித்து, தன்னுடைய ஜோதியை அளித்து தன்னுடைய தோழர்களாக ஆக்கிக் கொள்வதுடன் தன்னுடைய தர்பாரிலும் படைப்பினங்கள் மத்தியிலும் கௌரவித்து மகிழ்கிறான். “அல்லாஹ்வி”ன் தோழர்கள் எனப்படும் இவ்விறை நேசர்கள் தங்கள் இதயத்தில் பெற்ற ஒளியைக் கொண்டு மக்களின் இதய இருளகற்றி ஒளி பரவச் செய்கிறார்கள்.

மக்கள் பெருமளவில் தொழுகையிலிருந்து தொடங்கி கணக்கிலடங்கா வெளிரங்க அமல்கள் செய்தாலும் இதயம் அவர்களது அமல்களில் ஒத்துழைக்காமல் இருக்கும் நிலை இன்றும் உள்ளது. எதுவரை இதயம் இறை ஒளியால் நிரம்பி ரூஹு என்னும் ஃகல்பு தெளிவடையவில்லையோ அதுவரையில் நம்முடைய அமல்கள் முழுமை அடையாது என்பது திண்ணம், இந்நிலையில் மக்களை தெளிவுபடுத்த மக்களிலிருந்தே, ஒருவரை “அல்லாஹ்” தேர்ந்தெடுத்து தன்னுடைய படைப்புகளை நேர்வழிப் படுத்துகிறான்.



அவ்வழியில் மறக்க முடியாத ஒரு மாபெரும் இறைநேசச் செல்வர் மௌலானா அல்லாஹ்யார்ஃகான் (ரஹ்) அவர்கள் ஒரு ரூஹ் இன்னொரு ரூஹ் மூலமாக பெறும் ஒளிக்கல்வி முறையை பயிற்றுவித்து துரிதகால சிகிச்சையை அளிக்கலானார்கள். இந்த வழிமுறை, ஹளரத் உவைசுல்கர்னி (ரஹ்) அவர்கள் ரசூலுல்லாஹி ( சல் ) அவர்களை நேரில் சந்திக்காமலேயே அவர்கள் ரூஹிலிருந்துப் பெற்ற ஒளிக் கல்வி முறையாகும். இந்நிலையில் ஃகல்பி திக்ர் பயிற்சி அளித்து உவைசி முறையில் பயிற்சிபெறும் பயிற்சியாளர்கள் இன்று உலகம் முழுவதும் பரவி இருந்து பலனை பெறுகிறார்கள். இதனுடைய முக்கிய அம்சம் மாணவருடைய ரூஹின் நிலையைப் பலப்படுத்தி தர்பாரே நபவியில் “அல்லாஹ்” வின் ஹபீப் முஹம்மது முஸ்தஃபா (சல்) அவர்கள் முன் சமர்ப்பிக்கப்பட்டு ரூஹானி பைஅத் செய்விக்கப்படுகிறது. ஆரம்பத்திலிருந்து இறுதி நிலை வரை “அல்லாஹ்” என்று இதயம் மூலம் கூறும் வழிமுறையாகிய திக்ரே இலாஹியுடன் தஹஜ்ஜுத் தொழுகை நஃபில்கள் மற்றும் பர்ளு, சுன்னத்து, குர்ஆன் ஓதுதல், தஸ்பிஹாத் மூலமாக அமல்கள் உறுதிப்படுகிறது.

குர்ஆன், சுன்னத்திற்கு மாற்றமான எந்த ஒரு அமலும் ரூஹை பலவீனப்படுத்தி இதயத்தை சிதைத்துவிடும் என்பது இங்கு கடுமையாக வலியுறுத்தப்படுகிறது. சில்சிலா நக்ஷ்பந்தியா அவைசியா என்று அழைக்கப்படும் இந்தத் தொடர் மிகவும் வலிமையானது என்று போற்றப்படுவதற்குக் காரணம் முன்னொரு காலத்தில் வலிமையாக இருந்த சில்சிலாக்கள் இன்று சடங்குகளிலும் மேலோட்ட பாணியிலும் வீழ்ந்துகிடப்பதாலும் ஃபனாஃபிர்ரசூல், “ஃபனாஃபில்லாஹ்”, “பகாபில்லாஹ்” என்ற உயரிய அந்தஸ்து இன்று மறைந்து விட்டது.



பயிற்சி முறைகள் தஸ்பீஹ் அளவில் நின்று விட்டதாலும் அமல்களில் பலவீனம் ஏற்பட்டு தசவ்வுஃப் வழிமுறையில் இஹ்சான் எனும் படியேற்றம் இன்று காண அரிதாகிவிட்டது. ஆதலால் உள்ளத்தைத் தெளிவூட்டவும், ஒளியூட்டவும் சில்சிலா நக்ஷ்பந்தியா அவைசியா நமக்கு ஒரு அருமருந்தாக “அல்லாஹ்” வின் தரப்பில் இருந்து கிடைத் திருப்பதை நாம் வரவேற்று அதன் மூலம் பலனை அடைவது நாம் பெற்றுள்ளப் பெரும்பேறாகும்.

மேலும் இந்நூலை வாசிப்பவர்கள், இதில் காணும் ஆன்மீகப் பலன்களைப் பெற இந்த மஜ்லிசில் தொடர்பு கொள்ள வேண்டும் என அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

நூலை வாசிப்பதால் ஆன்மீக விபரங்களை மட்டுமே அறிய முடியும். நேரில் சந்தித்துப் பயிற்சி பெற்றால் ஆன்மீகப் பலன்களையும் பெற முடியும்.

வமா தவ்ஃபீகீ இல்லா பில்லாஹி அலைஹி தவக்கல்த்து வஇலைஹி உனீப்.


உங்கள் ஊழியன்

**முஹம்மது மாலிக்** ஃகலீஃபா-யே-ஹிந்த்

சில்சிலா நக்ஷ்பந்தியா அவைசியா.

**தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி**

46/98, ஏமுகிணறு தெரு,

சென்னை – 600 001.

செல் : 94444 55962

89258 73771

மௌலானா M **அப்துல் வஹ்ஹாப் சாஹிப்,** M.A. B.Th.,

அவர்கள் உவந்தளித்த

# அணிந்துரை

பிஸ்மில்லா ஹிர்ரஹ்மா னிர்ரஹீம்

நஹ்மதுஹு வநுசல்லி அலா ரசூலிஹில் கரீம்

அல்லாஹு சுப்ஹானஹு வ தஆலா தித்திக்கும் திருமறையில் "மனிதர்களை அழகிய அமைப்பில் திட்டமாக நாம் படைத்திருக்கின்றோம்" எனக் கூறுகின்றான்.

அதுமட்டுமல்ல; வலகத் கர்ரம்னா பனீ ஆதம் "ஆதமுடைய சந்ததியைத் திட்டமாக நாம் கண்ணியப் படுத்தினோம்" என்றும் "அல்லாஹ்" கூறுகின்றான்.

எவரும் பாவியாகப் பிறப்பதில்லை. "பிறக்கும் ஒவ்வொரு குழந்தையும், தீனுல் ஃபித்ரத் என்னும் இயற்கை நெறியில் நேர் வழியில் தான் பிறக்கின்றது...." என்று நாயகம் (சல்) அவர்கள் மானுடப் பிறவியின் தொடக்க நிலைபற்றி நம்பிக்கையும், நல்லெண்ணமும் தெரிவித்திருக்கின்றார்கள்.

மேலே எடுத்துக் காட்டப்பட்டவற்றின் அடிப்படைக் கருத்து என்னவென்றால் மானுடனை மிகச் சிறப்பாகப் படைத்து, அவனுக்கு சகல பாக்கியங்களையும் கொடுத்துத் தான் அல்லாஹு தஆலா அவனைப் பூவுலகுக்கு அனுப்புகிறான்.



எனினும், "எனக்கு அப்படி என்ன பாக்கியங்கள் இருக்கின்றன?" என்று தனக்குத் தரப்பட்டுள்ள நற்பேறுகளைப் பற்றிச் சிந்தியாமல் ஏன் அவற்றைப் பற்றித் தெரிந்து கொள்ளாமற்கூட மனிதன் அவநம்பிக்கையுடன் கேட்பதுண்டு.

இது பற்றி மௌலானா ஜலாலுத்தீன் ரூமி (ரஹ்) இவ்வாறு கூறுகிறார்கள்: ஒருவன் தம்மிடம் வந்து, "நான் எந்தச் செல்வமும் இன்றி வறுமையில் வாடுகிறேன்" என்று முறையிட்டு அங்கலாய்க்கிறான்.

"உனக்கு எந்தச் செல்வமும் "அல்லாஹு"த் தஆலா வழங்க வில்லை! என்று உண்மைக்கு மாறாகப் பேசாதே!" என்று ரூமி (ரஹ்) எச்சரித்தார்கள்.

"அப்படி என்ன செல்வத்தை "அல்லாஹ்" எனக்கு வாரி வழங்கி விட்டான்?" என்று பிடிவாதமாக அம்மனிதன் கேட்கிறான்.

"அதைப் பற்றி பின்னால் பேசுகிறேன். முதலில் உன்னிடம் ஒன்று கேட்கின்றேன். தருவாயா?" என்று மௌலானா வினவுகிறார்கள்.

"என்னிடம் தருவதற்கு என்ன இருக்கிறது?" என அவன் பதிலளிக்க, "உன்னிடமுள்ளதை தான் கேட்கின்றேன். உன் ஒரு கையை மட்டும் பிய்த்து எனக்குத் தந்துவிடு. பத்தாயிரம் ரூபாய் தருகின்றேன்".



"என் கையை உங்களுக்குத் தந்துவிட்டு நான் என்ன செய்வதாம்?" என்று அம்மனிதன் பதிலிறுக்கிறான்.

சரி, கை வேண்டாம்! உன் கண்களைத் தந்துவிடு; இன்னும் பெரிய தொகை உனக்கு தருகின்றேன்.

இப்படியே அவன் உடல் உறுப்புகள் பற்றியும், அவற்றைத் தந்தால் என்ன பணம் பெறலாம் என்பது பற்றியும் ரூமி (ரஹ்) கூறிக் கொண்டே போக, அம்மனிதன் ஆத்திரம் மிகுந்தவனாக: "யா ஷேஃக்! என்னுடைய அவலநிலையையும் ஏழ்மையையும் பற்றி உங்களிடம் சொல்லிப் பரிகாரம் தேடலாம் என்று உங்களிடம் வந்தால் அதைக் கொடு, இதை கொடு ஏராளமான பொருள் கிடைக்கும் எனப் பேசுகிறீர்கள்!" என்று அவன் பொரிந்து தள்ளினான்.

"மகனே, ஆத்திரப்படாதே! உன்னுள்ளே "அல்லாஹு"த் தஆலா அமைந்திருக்கும் கை, கால், கண், காது, சிரசு போன்ற ஒவ்வோர் உறுப்பும் எவ்வளவு விலை மதிப்புடையது என்பதை உணர்கிறாய் அல்லவா? இவற்றின் மொத்த மதிப்பு எத்தனை இலட்சங்கள் பெறும் என்பது பற்றியும் சற்று எண்ணிப்பார். இத்தகைய செல்வங்களை உனக்கு வழங்கியிருக்கும் வல்ல நாயனைத் துதித்து, அவனுக்கு நன்றி செலுத்தாமல், "எனக்கு நாயன் எதுவுமே தரவில்லை" என்று ஓலமிடுகின்றாயே இது அறிவுடைய செயலாகுமா? போ! அந்த உறுப்புகளை உரிய முறையில் பயன்படுத்தி வாழத் துவங்கு என்று ரூமி (ரஹ்) அவனுக்கு போதித்தார்கள்.



மேற்கூறிய உறுப்புகள் நம் கண்ணுக்குத் தெரிபவை. ஆனால் நம் கண்ணுக்குத் தெரியாமல் இருப்பவை புனிதமான ரூஹும் (ஆத்மாவும்) நஃப்சு என்னும் மனமும் ஆகும்.

புற உறுப்புகளைப் பயன்படுத்தினால் மனிதனுக்குச் செல்வம் சேரலாம்; பட்டம் பதவிகள் வரலாம்; அதிகாரமும் ஆதிக்கமும் கிட்டலாம். ஆனால் இவை தன்னைவிட்டுப் போய்விடக் கூடாதே என்ற கவலையும் வரும். இதன் விளைவு? அச்சமும், பேடித்தனமும், அடிமைச் சிறுமதியும் ஏற்படுதல்.

இந்த அவலநிலை ஏற்படாமல் மனிதனுக்கு என்றென்றும் அமைதியையும், ஆத்ம திருப்தியையும், சாந்தியையும், சமாதானத்தையும் தரவல்லது, மனக் கட்டுப்பாடு நம்முடைய புற உறுப்புகளையும் கட்டுப்படுத்தக் கூடியது இந்த மனம் என்னும் நஃப்சை நாம் கட்டுப்படுத்தத் தவறினால் அதை ஷைத்தான் தன்னுடைய கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவர முற்படுவான். அதில் நம்முடைய பலவீனத்தைப் பொறுத்து அவனுக்கு வெற்றியும் கிடைக்கும்.

இதனால்தான் அறிவுலகப் பேரொளி இமாம் ஃகஸ்ஸாலி (ரஹ்) அவர்கள் : அந்நஃப்சு அக்பது மின் சப்ஈன ஷயாத்தீன் 'இந்த மனமானது எழுபது ஷைத்தான்களையும் விட இழிவு தரக்கூடியது' எனக் கூறியுள்ளார்கள்.

கட்டுப்படுத்தப்படாத நஃப்சை – மனத்தை வெறிநாய்க்கு ஒப்பிடுவார்கள் மெஞ்ஞானிகள்.

"வேட்டை பெரிதென்று
வெறிநாயைக் கைப்பிடித்துக்

காட்டில் புகலாமோ
கண்ணே ரஹ்மானே!

என்று மஸ்தான் சாஹிப் (ரஹ்) பாடுகிறார்கள். இங்கு வேட்டை என்பது செல்வத்தைத் தேடுதல்; காடு என்பது இவ்வுலகம். இல்வுலகத்தில் செல்வத்தைத் தேடுதல் பாவமில்லை. 'தக்வா உடையோருக்கும், இறையச்சம் உடையோருக்கும் செல்வம் ஒரு பாக்கியம்தான்' என்று நாயகம் (சல்) கூறியுள்ளார்கள். ஆனால் அந்தத் தேட்டத்தில் மனதைக் கட்டுப்படுத்தாமல் ஈடுபட்டால், பேரிழப்பு உண்டாகும் என்பதுதான் சான்றோர்களின் எச்சரிக்கை யாகும்.

ஆனால் மனதைக் கட்டுப்படுத்துவது எப்படி என்பது தான் கேள்வி. இதற்கு உலகெங்கும் பல்வேறு சாரார் விதவிதமான வழிமுறைகளைக் கூறியுள்ளார்கள். எனினும் "நக்ஷ் பந்தியா அவைசிய்யா" என்னும் சிறப்புமிகு வழிமுறை மெஞ்ஞானப் பாதை மூலமாக ஆழ்நிலை தியானம், திக்ரு பயிற்சியின் மூலமாக மனக் கட்டுபாட்டை எப்படிக் கொண்டு வரலாம், அதன் மூலமாக எப்படி ஆத்மீக அமைதியையும், ஞானமும் பெறலாம் என்பதை அஷ்ஷேஃக் முஹம்மது மாலிக் அவர்கள் வெளிக்கொணர்ந்திருக்கும் இந்நூல் விளக்குகிறது.

தக்க ஆசான் ஒருவரின் வழிகாட்டுதலைப் பெற்று, இத்துறையில் மகத்தான வெற்றியைப் பெறமுடியும்.



என்பதனைத் தம் சுய அனுபவத்தோடு நம்பிக்கையுணர் வோடு மூல ஆசிரியப் பெருந்தகை விளக்குகிறார்கள். அவ்வாறு வழிகாட்டும் பாக்கியம் ஷேஃக் முஹம்மது மாலிக் அவர்களுக்கும் கிட்டியுள்ளது என்பது குறித்து மனமகிழ்கிறேன். இந்நிலையில் இந்நூலை வரவேற்கிறேன்; வாழ்த்துகிறேன்.

வ ஆஃகிரு தஃவானா அனில் ஹம்து லில்லாஹி ரப்பில் ஆலமீன்.

வஸ்ஸலாம்,
**அப்துல் வஹ்ஹாப்,** M.A., B.Th.,



## பொருளடக்கம்

**ஆன்மீகத்தின் இன்றைய நிலை :**

இன்றையக் காலகட்டத்தில் "அல்லாஹ்"வின் தொடர்பினையும், நெருக்கத்தையும் பெற்றுத் தரும் இஸ்லாத்தின் முக்கிய பகுதியான இஹ்சானுடையக் கல்வி மதரசா என்னும் அரபிக் கல்லூரிகளில் நீக்கப்பட்டுள்ளது.

உதாரணமாக இமாம் ஃகஸ்ஸாலியின் (ரஹ்) இஹ்யாவு உலூமித்தீன், மவ்லானா ரூமி (ரஹ்) அவர்களின் மஸ்னவி ஷரீஃப், முஹ்யித்தீன் அப்துல் காதிர் ஜீலானி (ரஹ்) அவர்களின் ஃகுனியத்துத் தாலிபீன், முஹ்யித்தீன் இப்னு அரபி (ரஹ்) அவர்களின் ஃபுத்தூஹாத்துல் மக்கிய்யா, அலிஹஜ்வீரி (ரஹ்) அவர்களின் கஷ்ஃபுல் மெஹ்ஜுப், இமாம் சுஹர்வர்தி (ரஹ்) அவர்களின் அவாரிஃபுல் மஆரிஃப், மௌலானா அஷ்ரஃப் அலி தானவி (ரஹ்) அவர்களின் தரீக்கத் வ ஷரீஅத், மற்றும் மௌலான அல்லாஹ் யார்ஃகான் (ரஹ்) அவர்களின் தலாயிலுஸ் சுலூக் போன்ற கிதாபுகள், இஹ்சான் பற்றியும், இதய (ரூஹின்) பரிசுத்தம் பற்றியும் அதற்காக நாம் மேற்கொள்ள வேண்டிய பயிற்சிகளைப் பற்றியும் விரிவாகப் பேசுகின்றன.

ஆனால் இவைகள் இன்றைய அரபிக்கல்லூரி பாடத்திட்டத்தில் இல்லாத காரணத்தினால் இக்காலத்தில் அரபி மதரசாக்களில் இருந்து படித்து வெளியாகும் உலமாக்கள் ஆன்மீகக்கல்வியின் அவசியத்தையும், அதன் பயிற்சி செய்யும் முறையையும் அறியாமல் இருக்கிறார்கள்.

மேலும் இன்று இயங்கிக் கொண்டு இருக்கும் பற்பல ஜமாத்துக்களும் இஹ்சானைத் தவிர இஸ்லாத்தின் வெளிரங்க அமல்களில் மட்டும் கவனம் செலுத்துகின்றன.



"அல்லாஹ்" குர்ஆனில் "**விசுவாசிகளே! இஸ்லாத்தில் முழுமையாக நுழைந்து விடுங்கள்**" எனக்குறிப்பிடுகிறான்.

(குர்ஆன் 2 : 208)

எனவே இஸ்லாம் கூறும் அனைத்து அமல்களையும் நமது வாழ்க்கையில் தேர்ந்து எடுத்துக் கொள்வது, மறுமையில் நமக்கு வெற்றியை தேடித் தரும் என்பது இந்த வசனத்தின் மூலமாக நமக்குத் தெளிவாக விளங்குகிறது.

இஸ்லாத்தின் ஒரு பகுதியான இஹ்சானுடைய பாடத்தையும் அதன் பயிற்சியையும் இந்த திக்ர் மஜ்லிசில் கற்றுக்கொடுக்கப்படுகிறது. இதில் பயிற்சிப் பெறும் ஒவ்வொருவரும் ஒரு மாதத்திற்குள்ளாகவே தங்கள் மனதில் நிம்மதி ஏற்படுவதையும் தொழுகையில் மன ஓர்மை ஏற்படுவதையும் காணலாம். "அல்லாஹ்" நம் அனைவருக்கும் "அல்லாஹ்"வின் நேசராக ஆகும் பாக்கியத்தைத் தந்தருள் வானாக ! (ஆமீன்)

**இறைநேசர்கள் :**

நாம் எத்தனையோ இறைநேசர்களின் வாழ்க்கை வரலாறுகளை கேட்டும், படித்தும் இருக்கிறோம். நம் உள்ளத்திலும் நாமும் ஓர் இறைநேசர் ஆக வேண்டும் என்ற ஏக்கம் இருந்து கொண்டு தான் இருக்கிறது.

இறைநேசச் செல்வர்களின் வரலாறுகளில் அவர்களின் நற்குணங்களும், கராமாத் என்னும் அற்புதங்கள் மட்டுமே விவரிக்கப்படுகின்றன. மாறாக அவர்கள் எவ்வாறு இறைநெருக்கத்தை அடைந்து கொண்டார்கள் என்ற பயிற்சிமுறை விளக்கப்படுவதில்லை. ஆனால் அவர்கள் ஏதாவது காமிலான ஷேஃக் மார்களிடம் பயிற்சி பெற்று



அவர்களின் தொடர்பில் இந்த இறைநேச ஞானப்படித் தரங்களை அடைந்து கொண்டார்கள் என்ற விபரம் காணப்படுகிறது.

அதைப்போல நாமும் உயர்ந்த ஞானப் படித்தரங்களை பெற்ற காமிலான ஷேஃக்கிடம் பயிற்சிபெறும் போது "அல்லாஹ்"வின் அருளால் நாமும் (இறைநேசர்களாக) வலியுல்லாஹ்க்களாக ஆகலாம்.

ஆகவே அப்படிப்பட்ட காமிலான ஷேஃக்மார்கள் உலகின் மூலையில் எங்காவது இருக்கத்தான் செய்கிறார்கள். அவர்களைத் தேடி கண்டுபிடிப்பது நமது கடமையாகும். மாணிக்கங்களையும், வைரம், வைடூரியங்களையும் தேடித்தான் கண்டுபிடிக்க வேண்டும். ஏனென்றால் அவை அரியவை, விலைமதிப்புமிக்கவை.

நக்ஷ்பந்தியா அவைசியாவின் பாடத்திட்டத்தில் இணைந்து நாமும் பயிற்சி செய்யும் போது "அல்லாஹ்"வின் அருளால் ஞானப் படித்தரங்களை கடந்து நாமும் ஓர் இறை நேசராக, வலியுல்லாஹ்வாக ஆக முடிகிறது.

மற்ற சில்சிலாக்களில் கடைசியாக கற்றுக் கொடுக்கப்படும். பாஸ்அன்ஃபாஸ், ஃகல்பிதிக்ர் பயிற்சியும், அதனுடன் முராக்கபாவும் ஆரம்பப்பாடமாக நமது நக்ஷ்பந்தியா அவைசியாவில் கற்றுத் தரப்படுகிறது. இதனை காலை 30 நிமிடங்களும், மாலை 30 நிமிடங்களும் செய்து வரவேண்டும். ஆரம்பப் பாடமாகவே ஃகல்பி திக்ர் கற்று தரக்காரணம் இந்த சில்சிலாவை புணர்நிர்மானம் செய்த மவ்லானா ஷேஃக் அல்லாஹ்யார் ஃகான் (ரஹ்) ஆவார்கள். அவர்களை பற்றிய வரலாற்றைப் பார்ப்போம்.



## அண்மை காலத்திய வரலாறு

ஷேஃக் "அல்லாஹ்" யார்ஃகான் (ரஹ்) 1926ம் வருடம் மதரசாவில் படித்து ஆலிம் பட்டம் பெற்றார்கள். மேலும் கல்வியைத் தேடி டெல்லி வந்தார்கள். தேவ்பந்தில் பெயர் பெற்ற மவ்லானா சாஹிப் ராம்பூரி (ரஹ்) அவர்களிடம் அரபி இலக்கணத்தை கற்றுத் தேர்ந்தார்கள். பின்னர் அப்துல் கரீம் லாஹுரி (ரஹ்), முஹம்மது இல்யாஸ் சுஹர்வர்தி (ரஹ்) போன்ற ஷேக் மார்களிடம் மார்க்க விஷயங்களை கற்றுத் தேர்ந்தார்கள்.

1932 ல் மவ்லானா சய்யித் அமீர் ஃபாஜில் தேவ்பந்தி (ரஹ்) அவர்களிடம் ஹதீசை முழுமையாக (மனனம் செய்ததை திரும்பவும் ஓதி) தவ்ரா செய்தார்கள்.

1933 ல் டெல்லியில் உள்ள மதரசா அமீனிய்யாவில் முஃப்தி கிஃபாயதுல்லாஹ் (ரஹ்) அவர்களிடம் பைலாவி ஷரீஃப், தஹாவி ஷரீஃப் மேலும் ஹிதாயா போன்ற கிரந்தங்களைக் கற்றுத் தேர்ந்தார்கள்.

பின்னர் திரும்பவும் ஹதீசை முழுமையாக தவ்ரா செய்தார்கள். பின்னர் மவ்லானா அன்வர் ஷா கஷ்மீரி (ரஹ்) மவ்லானா ஃகலீல் அஹ்மது ராம்ப்பூரி (ரஹ்) போன்ற பெரியார்களிடம் பாடம் கற்றார்கள்.

பின்னர் தங்கள் ஊர் திரும்பி தீன் பணியை செய்து வரும் காலத்தில் ஷியாக்கள் தங்கள் கொள்கைகளை நிலைநிறுத்த விவாத அரங்குகள் நடத்தி வந்த போது சுன்னத் வல்ஜமாஅத் சார்பாக ஷேஃக் மவ்லானா "அல்லாஹ்" யார்ஃகான் (ரஹ்) அவர்கள் விவாதம் செய்து ஹக்கை (சத்தியத்தை) நிலைநிறுத்தி வெற்றி பெற்றார்கள்.

ஷியாக்களின் மவ்லானா இஸ்மாயில் என்பவர் ஷேஃக் "அல்லாஹ்" யார்ஃகான் (ரஹ்) அவர்கள் விவாதத்திற்கு

வந்து இருக்கிறார்கள் என்று தெரிந்தால், உடல் நிலை சரியில்லை என காரணம் கூறி விவாத அரங்கிற்கு வராமல் தவிர்ப்பதை வழக்கமாக்கி கொண்டார். வாதப் பிரதி வாதங்களில் எதிரிகளை நிலை குலையச் செய்து சுன்னத் வல்ஜமாஅத் கொள்கையை நிலைநாட்ட தங்கள் முழுவாழ்க்கையையும் அர்ப்பணித் தார்கள்.

ஒருநாள் அவர்கள் தங்களுடைய காணாமல் போன மாட்டைத்தேடித் தங்களுடையப் பக்கத்து கிராமத்துக்குச் சென்றார்கள். அங்கு ஓர் திண்ணை மஜ்லிசில் நான்கைந்து வயது முதிர்ந்தவர்கள் தங்களுக்குள் விவாதித்துக் கொண்டிருப்பதை தூரத்திலிருந்து கண்டு இவர்களிடத்தில் மாட்டைப்பற்றி விசாரிப்போம் என அருகில் சென்றார்கள். அப்பெரியார்கள் விவாத சுவாரஸ்யத்தில் இவர்களைக் கண்டுக் கொள்ளவில்லை. விவாதத்தின் ஆழத்தைச் செவியுற்ற மௌலானா "அல்லாஹ்" யார்ஃகான் (ரஹ்) வெகுண்டார்கள். ஏன் என்றால் இறந்தவர்களுடைய (ஆன்மா) ரூஹுடன் பேச முடியுமா? என்ற விவாதம் அங்கு நடந்து கொண்டிருந்தது. ஷேஃக் "அல்லாஹ்" யார்ஃகான் (ரஹ்) அவர்கள் இறந்தவர்களின் ஆன்மாவுடன் (ரூஹுடன்) பேச முடியாது என்று விவாதம் செய்தார்கள்.

அப்பொழுது அங்கு இருந்த இறை நேசர் மௌலானா அப்துர் ரஹீம் (ரஹ்) அவர்கள் "இவ்வுலகை விட்டு மறைந்த ஆன்மாக்களுடன் பேச முடியும்; நானும் பேசிக் கொண்டுதான் இருக்கிறேன்" எனக் குறிப்பிட்டார்கள். இதனைக் கேட்ட ஷேஃக் அல்லாஹ்யார் ஃகான் (ரஹ்) அவர்கள் "என்னை உங்களால் அவர்களுடைய ஆன்மாவுடன் பேச வைக்க முடியுமா?" எனக் கேட்டார்கள். நிச்சயமாக முடியும் எனக்கூறிய ஷேஃக் அப்துர்ரஹீம் (ரஹ்) அவர்கள், ஷேக் "அல்லாஹ்" யார்ஃகான் (ரஹ்) அவர்களை 400 வருடங்களுக்கு முன்பு வாழ்ந்து



மறைந்த ஃக்வாஜா "அல்லாஹ்" தீன் மதனி (ரஹ்) அவர்களின் கல்லறைக்கு அழைத்துச் சென்றார்கள்.

அங்கு ஷேஃக் "அல்லாஹ்" யார்ஃகான் (ரஹ்) அவர்களை முராக்கபா செய்ய வைத்து "அல்லாஹ்"வின் அருளால் ரூஹானி முறையில் ஃக்வாஜா அல்லாஹ்தீன் மதனி (ரஹ்) அவர்களுடைய ஆன்மாவுடன் (ரூஹ்) பேசும் வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்தார்கள்.

அதன்மூலம் ஆன்மீக விஷயங்கள் பலவற்றை தெரிந்து கொண்ட ஷேஃக் "அல்லாஹ்" யார்ஃகான் (ரஹ்) அவர்கள், ஷேஃக் க்வாஜா அல்லாஹ்தீன் (ரஹ்) அவர்களிடம் "மதினா நகரத்தைச் சேர்ந்த தாங்கள் சிறப்பு மிக்க அந்த மாநகரத்தைவிட்டும் இங்கு வந்ததின் காரணம் என்ன?" என்று வினவினார்கள். அதற்கு ஃக்வாஜா அல்லாஹ்தீன் மதனி (ரஹ்) அவர்கள்

"400 வருடங்களுக்குப்பிறகு "அல்லாஹ்" யார்ஃகான் (ரஹ்) என்ற தாங்கள் இங்கு வருவீர்கள். மேலும் உங்கள் மூலமாகத்தான் உலக முழுவதும் ஆன்மீக ஒளி பரவ இருக்கிறது. ஆகவே உங்களுக்கு பயிற்சி அளிக்கத்தான் 400 வருடங்களாக உங்களின் வரவை நாடி இங்கு நான் காத்திருக்கிறேன்". என்று கூறினார்கள்.

ஷேஃக் ஃக்வாஜா "அல்லாஹ்"தீன்மதனி (ரஹ்) மூலமாக பாஸ் அன்ஃபாஸ், ஃகல்பி திக்ர், முராக்கபா செய்யும் முறையை கற்றுக் கொண்ட ஷேஃக் "அல்லாஹ்" யார்ஃகான் (ரஹ்) அவர்கள் தொடர்ந்து பல வருடங்கள் பயிற்சி செய்தார்கள். இப்பயிற்சியின் காரணமாக விலாயத்தின் ஆரம்பப் படித்தரங்களாகிய 1. அஹதிய்யத், 2. மஇய்யத், 3.அக்ரபிய்யத், 4. சேரெ கஃபா, 5.மஸ்ஜிதுந் நபவீ, 6. "ஃபனா ஃபில்லாஹ், 7. "பஃகா பில்லாஹ் போன்ற ஞானப்படித்



தரங்களை கடந்து நபி சல்லல்லாஹு அலைஹி வசல்லம் அவர்களிடத்தில் ரூஹானி முறையில் பைஅத் பெற்றார்கள்.

அதன்பின் விலாயத்தே குப்ரா என்னும் வலிமார்களின் உயர்ந்த படித்தரங்களாகிய 1.அப்தால், 2.குத்பு, 3.கௌஸ், 4.ஃபர்து, 5. கய்யூம் 6.குதுபே வஹ்தத், 7.சித்தீகிய்யத் என்னும் உயர்நிலை ஞானப்படித்தரங்களை கடந்தார்கள்.

எப்படி மூசா (அலை) அவர்கள் நெருப்பை தேடிச் சென்ற இடத்தில் "அல்லாஹ்"வின் அருளால் நபி பட்டம் பெற்று திரும்பினார்களோ. அதே போல் மாட்டைத் தேடிச் சென்ற ஷேஃக் "அல்லாஹ்"யார்ஃகான் (ரஹ்) விலாயத்தின் உயர்நிலையை "அல்லாஹ்"வின் அருளால் பெற்றுக் கொண்டார்கள்.

அதற்கு பின்னர் குறிப்பிட்ட மாணவர்களுக்கு மட்டும் இப்பயிற்சியை அளித்தார்கள். ஆனால் இந்தக் காலக்கட்டத்தில் அனைத்து மக்களுக்குமே இதய (ரூஹின்) பரிசுத்தம் அவசியம் என்பதையும் மேலும் இதை மக்களுக்கு எத்திவைக்க மஸ்ஜிதுந் நபவியில் நபி (சல்) அவர்களிடமிருந்து உத்தரவு கிடைக்கப்பெற்றார்கள்.

இதன் காரணமாக இதய (ரூஹின்) பரிசுத்தத்தைப் பெற்றுத்தரும் இந்த ஆன்மீகப் பாதையின் பக்கம் அனைத்து மக்களுக்கும் பொதுவாக அழைப்புக் கொடுத்தார்கள். மேலும் தங்களிடம் வந்து 40 நாட்கள் தங்கி இருந்து, இந்தப் பயிற்சியை முறையாக செய்தார்களோ அவர்களை விலாயத்தின் ஆரம்ப ஞானப்படித்தரங்களாகிய அஹதிய்யத், மஇய்யத், அக்ரபிய்யத் ஆகிய படித்தரங்களைக் கடக்க வைத்து, மஸ்ஜிதுன் நபவீ என்றப் படித்தரத்தைப் பெற்றுத் தந்து நபி சல்லல்லாஹு அலைஹி வசல்லம் அவர்களின் தர்பாரில் அமர்ந்து இருக்கும் பாக்கியத்தையும் "அல்லாஹ்"வின் அருளால் பெற்றுத் தந்தார்கள்.



மேலும் மஸ்ஜிதுன் நபவீ என்றப் படித்தரத்தை அடைந்தவர்கள். காலையிலும், மாலையிலும் ஃகல்பிதிக்ர் செய்தபின் முராக்காபாவில் தங்களுடைய ரூஹ் மஸ்ஜிதுந் நபவீ சென்று அங்கு நபிசல்லல்லாஹு அலைஹிவசல்லம் தர்பாரில் அவ்லியாக்களின் வரிசையில் தானும் ஒருவராக அமர்ந்து சிறிது நேரம் சலவாத் ஓதிவிட்டு திரும்பி வருவதை இந்த மஸ்ஜிதுன் நபவீ அடைந்த ஒவ்வொருவரும் உணர்ந்து கொள்ளலாம்.

இந்தப்படித்தரம் பெற்றவர்களுக்கு நபி சல்லல்லாஹு அலைஹி வசல்லம் அவர்களிடம் முராக்கபாவில் ரூஹானி முறையில் பைஅத் செய்வித்தார்கள்.

ஷேஃக் மவ்லானா அல்லாஹ் யார்ஃகான் (ரஹ்) அவர்களின் அழைப்பை ஏற்று அனேக மக்கள் பயிற்சி பெற்று நபி சல்லல்லாஹு அலைஹி வசல்லம் அவர்களிடம் ரூஹானி பைஅத் பெற்றுக் கொண்டார்கள்.

அதனைத் தொடர்ந்து மாணவர்கள் மேலும் பயிற்சி செய்து அதற்கு அடுத்த உயர் படித்தரங்களை பெற்றுக் கொண்டார்கள். ஷேஃக் அல்லாஹ்யார்ஃகான் (ரஹ்) அவர்கள் தசவ்வுஃப் சம்பந்தப்பட்ட பல நூல்களை எழுதியுள்ளார்கள். அதில் தலாயிலுஸ் சுலூக் (ஞானப்படித் தரங்களின் விளக்கங்கள்) என்ற புத்தகத்தில் தாங்கள் கடந்து சென்ற, தங்களுடைய கஷ்ஃப் என்ற ஞானக்கண்கொண்டுப் பார்த்த, விலாயத்தின் ஒவ்வொரு படித்தரங்களையும், அவை அமைந்து இருக்கும் இடங்களையும் அதனுடைய அமைப்புகளையும் தெளிவாக விளக்குகிறார்கள்.

இன்ஷா அல்லாஹ் ஆரம்பப்படித்தரங்களையும், அவை அமைந்து இருக்கும் இடங்களையும், அதன் அமைப்புகளையும் இந்தப்புத்தகத்தின் கடைசியில் விவரிக்கப்படும்.

ஷேஃக் "அல்லாஹ்" யார்ஃகான் (ரஹ்) அவர்கள் தனது எண்பதாவது வயதில் இறையடி சேர்ந்தார்கள். அந்த சமயத்தில் தமது மாணவர்களிலேயே தீர்க்க ஞானமும், ஆழ்ந்த சிந்தனையும், ஞானப்பார்வையுமுள்ள ஷேஃக், முஹம்மது அக்ரம் அவான் (ரஹ்) அவர்களை இந்த சில்சிலாவின் தலைவராக நியமித்தார்கள்.

## நிகழ்காலத் தலைவர்

உலக முழுவதும் உள்ள சில்சிலா நக்ஷ்பந்தியா அவைசியாவின் தலைவராக ஷேஃக் முஹம்மது அக்ரம் அவான் (ரஹ்) அவர்கள் இருந்தார்கள். இவர்கள் 26 வருடங்கள் ஷேஃக் அல்லாஹ் யார்ஃகான் (ரஹ்) உடன் இருந்து பயிற்சி பெற்றார்கள்.

1984ல் ஷேஃக் அல்லாஹ் யார்ஃகான் (ரஹ்) அவர்களின் மறைவுக்கு பின்னர் 23 வருடங்களாக அனைத்து தரப்பு மக்களுக்கும் இந்தப் பொக்கிஷத்தை தங்களுக்குள் மறைக்காமல் வாரி வாரி வழுங்கி வந்தார்கள்.

இவர்களின் மாணவர்கள் அமெரிக்கா, பிரிட்டன், ஜப்பான், கனடா, ஆப்பிரிக்கா, துபை, குவைத், இந்தியா, பாகிஸ்தான், இலங்கை மற்றும் உலகமுழுவதும் நிறைந்து இருக்கிறார்கள்.



இவர்கள் எழுதிய அஸ்ராருத் தன்ஜீல் (குர்ஆனின் இரகசியங்கள்) என்னும் குர்ஆனின் தஃப்சீர் மிகவும் பிரசித்தி பெற்றதாகத் திகழ்கிறது. இதில் தசவ்வுஃப் சம்பந்தப்பட்ட ஆன்மீக இரகசியங்கள் தெளிவாக விவரிக்கப்பட்டுள்ளது.

இவர்களிடம் ஆன்மீக ஞானப்பார்வை (கஷ்ஃப்) இருப்பதாலும், 100க்கும் அதிகமான தஃப்சீர்களை படித்து அதன் கருத்துகளையும் இதில் ஒன்று திரட்டி இருப்பதாலும் இது விஷேசமான பொக்கிஷமாக பல்வேறு துறையை சேர்ந்த அறிஞர்களிடமும் பாராட்டுக்களைப் பெற்றுள்ளது. இதனுடைய மொழிபெயர்ப்பு உருதுவிலும், ஆங்கிலத்திலும் வெளிவந்துள்ளது. இவை சென்னை அவைசியா மஜ்லிசின் தலைமையகத்தில் கிடைக்கும்.

மேலும் அல்-முர்ஷித் என்ற மாத இதழ் உருது மொழியில் வெளிவந்து கொண்டிருக்கிறது. அதில் முழுமையான ஆன்மீகம் எனும் இஸ்லாத்தின் மூன்றாவது பகுதியான ஹதிசே இஹ்சானின், ஆழ்ந்த கல்வியும் ஆன்மீகக் கேள்வி பதில்களும், இந்த ஃகல்பி திக்ர் பயிற்சியை மேற்கொண்டவர்களின் வாழ்க்கையில் ஏற்பட்ட மாற்றங்களையும், குர்ஆனின் ஆன்மீக இரகசியங்களையும் உள்ளடக்கி உள்ளது. இவர்கள் கடந்த ஃபெப்ரவரி 2018ல் வஃபாத்தானார்கள். தற்போதய சில்சிலாவின் தலைவராக ஷேக் மவ்லானா முஹம்மது அக்ரம் அவான் (ரஹ்) அவர்களின் மகனார் ஹளரத் அப்துல் கதீர் அவான் அவர்கள் நியமிக்கப்பட்டு இருக்கிறார்கள்.

ஷேஃக் மவ்லானா முஹம்மது அக்ரம் அவான் (ரஹ்) அவர்களால் இந்தியாவின் ஃகலீஃபாவாக நியமிக்கப்பட்டவர்கள்தான், ஷேஃக் மவ்லானா முஹம்மது மாலிக் (தாமத் பரகாத்துஹு) அவர்கள், அவர்களை இந்த சில்சிலாவில் ஈடுபடுத்தியது எது என்பதனைக் காண்போம்.



## இந்தியாவின் ஃகலீஃபா

ஐக்கிய அரபு அமீரகத்தில், அந்த நாட்டைச் சேர்ந்த கூட்டு ராணுவத் தலைமையகத்தில் பணியாற்ற ஷேஃக் முஹம்மது மாலிக் (தாமத் பரகாத்துஹு) சென்றார்கள். அங்கு இருந்த நக்ஷ்பந்தியா அவைசியா வழிமுறையின் ஃகலீஃபா மூலமாக ஃகல்பி திக்ர் பயிற்சி செய்யும் பாக்கியத்தை அடையப்பெற்றார்கள்.

ஆரம்ப நாட்களில் அவர்களுடைய கஷ்ஃபு என்றும் அகக்கண் பார்வை "அல்லாஹ்"வின் அருளால் திறக்கப்பட்டதினால், இந்தப் பயிற்சியை செய்யும் போது இதயத்தில் ஒளிகள் இறங்குவதையும், பல மறைவான ஆன்மீகக் காட்சிகளையும் அவர்கள் கண்டார்கள். இது அவர்களுடைய ஆர்வத்தை அதிகப்படுத்தியது. எனவே அவர்கள் ஃகல்பி திக்ர் பயிற்சியின் மூலமாக விலாயத்தின் ஆரம்ப ஞானப்படித்தரங்களைக் கடந்து நபி (சல்) அவர்களிடம் ரூஹானி பைஅத் பெற்றார்கள்.

மேலும் தொடர்ந்து பயிற்சி செய்து "அல்லாஹ்"வின் அருளால் நபி (சல்) அவர்கள் மூலமாக உயர்ந்த ஞானப் படித்தரங்களை அடைந்தார்கள்.

இந்த சமயத்தில் தமக்கு கிடைத்த இந்த பொக்கிஷம், இந்திய திருநாட்டில் உள்ள மக்களும், அடைய வேண்டும் என்ற ஆர்வம் அவர்கள் உள்ளத்தில் உதித்தது. இதன் காரணமாக தங்களின் பணியினை ராஜினாமாச் செய்து இப்பணிக்காக தன்னை அர்ப்பணிக்க இந்தியாவிற்கு திரும்ப முயற்சி செய்யலானார்கள்.



இந்தக்காலக் கட்டத்தில் நபி (சல்) அவர்கள் முராக்கபாவில் (நனவில்) அரசு உத்தரவுப் போன்ற பேழையில் பச்சை விரிப்பில் பொன் எழுத்துக்களில் இந்தியாவின் ஃகலீபாவாக நியமனம் செய்து ஆன்மீக ரீதியாக அங்கீகாரம் வழங்கினார்கள். அதன்பின் 40 நாட்களில் ஷேஃக் முஹம்மது அக்ரம் (ரஹ்) அவர்கள், ஷேஃக் முஹம்மது மாலிக் அவர்களை இந்தியாவுடைய ஃகலீஃபாவாக வெளிரங்க ரீதியாக நியமித்து அவர்களை வாழ்த்தி துஆச் செய்து அனுப்பி வைத்தார்கள். 1991ம் ஆண்டு இறுதியில் இந்தியாவின் நக்ஷ்பந்தியா அவைசியாவின் ஃகலீஃபாவாக நியமிக்கபட்ட ஷேஃக் மவ்லானா முஹம்மது மாலிக் (தாமத் பரகாத்துஹு) அவர்கள், இந்தியாவின் பல பாகங்களுக்கும் சென்று அழைப்புக் கொடுத்தார்கள்.

"அல்லாஹ்"வின் கிருபையால் இவர்களின் அழைப்பை ஏற்று டெல்லி, மத்தியபிரதேசம், உத்திரபிரதேசம், ராஜஸ்தான், ஆந்திரா, தமிழ்நாடு போன்ற மாநிலங்கள் மட்டுமல்லாது இலங்கையிலும், மலேசியாவிலும் இவர்களின் மாணவர்கள் நிறைந்து இருக்கிறார்கள்.

இந்தக் ஃகல்பிதிக்ரைக் கற்றுக் கொண்டு தஹஜ்ஜுத் தொழுகையுடன் காலை, மாலை 40 நிமிடங்கள் குறைந்த பட்சம் இந்த பயிற்சியை 3 மாதங்கள் தொடர்ந்து செய்கிறார்களோ அவர்களுக்கு விலாயத்தின் ஆரம்பப் படித்தரங்களாகிய அஹதிய்யத், மஇய்யத், அக்ரபிய்யத் ஆகிய மூன்று ஞானப் படித்தரங்களையும் கடக்க வைக்கிறார்கள்.

தொடர்ந்து பயிற்சி செய்பவர்களுக்கு அடுத்த மூன்று மாதங்களில் மஸ்ஜிதுன் நபவீ என்னும் மஃகாமை பெற்றுத் தருகிறார்கள். இந்த மஃகாமை அடைந்தவர்களுடைய ரூஹ் தினமும் காலை மாலை ஃகல்பி திக்ருக்கு பின்னர் முராக்காபாவில் நபிசல்லல்லாஹு அலைஹி வசல்லம் தர்பாரில் அவ்லியாக்களின் வரிசையில் தானும் ஒருவராக அமரும் பாக்கியத்தையும், நபி சல்லல்லாஹு அலைஹி வசல்லம் அவர்களின் நேரடி துஆ பரக்கத்தையும் பெற்றுக் கொள்கிறது.

அதற்கு அடுத்த நிலையாக நபி சல்லல்லாஹு அலைஹி வசல்லம் அவர்களிடத்தில் ரூஹானி முறையில் பைஅத், ஒவ்வொரு மாணவருக்கும் முராக்காபாவில் செய்து வைக்கிறார்கள். அககண் (கஷ்ஃப்) திறக்கப்பட்ட மாணவர்கள் நபி (சல்) அவர்களிடம் முசாபஹா செய்து பைஅத் செய்யும் காட்சியை முராக்காபாவில் நேரடியாக கண்டு கொள்வார்கள்.

"அல்லாஹ்"வின் கிருபையால் இந்த சில்சிலாவில் நபி (சல்) அவர்களிடம் பைஅத் ஆனவர்கள் ஆயிரத்துக்கும் அதிகமானவர்கள் உள்ளார்கள். (அல்ஹம்துலில்லாஹ்!)

சில்சிலா நக்ஷ்பந்தியா அவைசியாவின் தலைமையிடம் அவைசியா மஜ்லிஸ் என்ற பெயரில் சென்னையில் ஏழுகிணறு பகுதியில் அமைந்துள்ளது. அங்கு தினமும் ஷேஃக் முஹம்மது மாலிக் (தாமத் பரகாத்துஹு) அவர்களின் தலைமையில் தஹஜ்ஜுத் நேரத்திலும், மஃரிபுக்கு பின்னரும் ஃகல்பி திக்ர் வழமையாக நடந்து கொண்டிருக்கிறது. அருகாமையில் உள்ள மாணவர்கள் ஜமாஅத் திக்ருடன் இணைந்து பலன் பெற்றுக் கொள்கிறார்கள்.



# ஷைத்தான் யார்?

"ஷைத்தானைப் பற்றியும் சிந்தனை செய்து பாருங்கள். உங்களை முறியடிப்பது ஒன்றையே குறியாகக் கொண்டு அவன் தயாராக நிற்கிறான் என்பதை நீங்கள் தெரிந்து கொள்ளலாம். எனவே இறைவனிடம் பாதுகாப்புக் கோருங்கள். இறைவன் வலிமை மிக்கவன் அடக்கியாள்பவன். ஷைத்தான் என்றால் என்ன என்பதை ஏற்கனவே நான் தெளிவுபடுத்தியிருக்கிறேன். அவனைச் சாதாரணமாக நினைத்து விடாதீர்கள். அவனுடைய சூழ்ச்சிகளும், தந்திரங்களும் கொடுமையானவை. இறை தியானம் ஒன்றைத் தவிர்த்து வேறு எந்த அமலைக்கொண்டும் எதை வைத்து அவனை உங்களால் விரட்ட முடியாது".

-இமாம் ஃகஸ்ஸாலி (ரஹ்) ஆதாரம் : நூல் : பக்தர்களின் பாதை

ஷைத்தானைப் பற்றி "அல்லாஹ்" குறிப்பிடும்போது "கான மினல் ஜின்னி" (சூரா கஹ்ஃப் 18-50) அவன் ஜின் இனத்தைச் சேர்ந்தவன் என குறிப்பிடுகிறான். "அல்லாஹ்"வால் லஃனத்து செய்யப்பட்டது மட்டுமல்லாமல் "அல்லாஹ்"வுடைய தர்பாரில் இருந்து விரட்டப்பட்டவன். மனிதனை படைத்து அதில் சிறப்பு மிக்க "அல்லாஹ்"வின் தஜல்லியாத் (ரூஹ்) எனும் ஒளியை செலுத்தி மற்றப் படைப்புகளில் இருந்து மனிதன் மாறுபட்டவன், உயர்ந்தவன் என்ற நிலையில் இறை உத்தரவுக்கு மலக்குகள் ஆதம் (அலை) அவர்களுக்கு சஜ்தா செய்யும்போது தன்னுடைய நெஞ்சை நிமிர்த்தி தன்னை உயர்ந்தவன், சிறந்தவன் என்று கூறியவன். "இந்த மனிதப்படைப்பை முன்புறமும், பின்பிறமும், வலது புறமும், இடது புறமும் ஆக நாலா புறமும் வழிக் கெடுப்பேன் இந்த மனிதர்களில் பெரும்பான்மையோர் நன்றிக் கெட்டவர்களாக நீ காண்பாய்" (சூரா : அஃராஃப் 7-17) என "அல்லாஹ்"விடம்



சவால் விடுகிறான். குர்ஆனின் மற்றோரிடத்தில் "இதயப் பரிசுத்த தன்மையோடு அல்லாஹ்வின் தொடர்புள்ளவர்களை தன்னால் ஒன்றும் செய்ய இயலாது" (சூரா : ஹிஜ்ர் : 15-40) (சூரா : சாத் : 38-83) என்றும் கூறுகிறான். இதையே அல்லாஹ் பிறிதோர் இடத்தில் "அல்லாஹ்வின் தொடர்பில் அவனுடைய வணக்கத்திலும், நேசத்திலும், அன்பிலும் திளைத்திருப்பவர்களின் மீது ஷைத்தானின் ஆதிக்கம் செல்லாது எனக் குறிப்பிட்டு அந்த நல்லடியார்களை பாதுகாக்க இறைவனே போதுமானவன்" (சூரா : பனி இஸ்ராயில் : 17-65) என ஆணித்தரமாகக் கூறுகின்றான்.

இந்த வலிமை மிக்க விவாதத்தில் "அல்லாஹ்" நமக்கு அச்சமூட்டி எச்சரிக்கிறான். இன்றைக்கு நம் மத்தியில் செயல்படக்கூடிய ஒவ்வொரு கூட்டங்களையும், இந்தக் கூட்டங்களின் தலைவர்களையும் சற்று ஆழ்ந்து கவனியுங்கள். இப்லீஸ் எந்த வசனத்தை அல்லாஹ்விடத்தில் தான் சிறந்தவன் என்று சொன்னானோ அந்தப் பெருமைகளையே இவர்களும் பேசுகிறார்கள்.

குர்ஆனில் நாற்பதுக்கும் அதிகமான "திக்ருல்லாஹ்"வின் ஆயத்துக்கள் இவர்களின் கண்களில் படுவதில்லை. வெளிரங்க அமல்களில் மட்டும் மக்களை ஈடுபட செய்கிறார்கள். இதயப் பரிசுத்தம் என்ற அமலுக்கு யாரும் உடன் படத் தயாராக இல்லை. வெளிரங்க அமல்களில் ஏற்படும் கருத்து வேறுபாடுகளில் மோதிக்கொள்ளும் இவர்கள், "தஜ்கியத்துன்நப்ஸ்" எனும் இதயப் பரிசுத்தம், சுலூக் எனும் இறை நெருக்கம், மஃரிஃபத் எனும் "அல்லாஹ்"வின் மறை ஞானம் ஆகியவைகளை மக்கள் இதன் பக்கம் நெருங்காமல் இருக்க அனைத்துக் கூட்டங்களும் ஒற்றுமையாக இருந்து ஷயாத்தீன் எனும் இப்லீஸ் கூட்டத்திற்கு ;உதவி புரிகிறார்கள். இதிலுள்ள மிகப்பெரிய ரகசியம் என்னவென்றால் உடல் வலிமையாக இருந்து உலக இச்சையுடன் கூடிய வணக்கத்தைக் கொண்டு



இறைவனுடைய வெறுப்பையும் நரகத்தின் நுழைவையும் தவிர நாம் அடைவது வேறொன்றுமில்லை "திக்ருல்லாஹ் வின் துணைகொண்டு ஆன்ம (ரூஹின்) வலிமையால் வணங்கும் வணக்கங்களால் கிடைக்கும் பரிசு "அல்லாஹ்"வின் பொருத்தத்துடன் சுவனத்தின் நுழைவைத் தவிர நாம் அடைவது வேறொன்று மில்லை . இமாம் ஃகஸ்ஸாலியின் (ரஹ்) மேற்கூரிய அறிவுரையை ஆழ்ந்து சிந்தியுங்கள் "திக்ருல்லாஹ்" (தியானம்) இல்லாத இதயம் இருண்டு விடுகிறது. ரூஹ் (ஆன்மா) மய்யித்தாக (சவம்) ஆகிவிடுகிறது. நம்முடை இதய இருளில் ஷைத்தான் "அல்லாஹ்"விடத்தில் என்ன சொல்லி வாதிட்டானோ அதை நம் மூலமாக நிறைவேற்றிவிடுகிறான். இறை தியானத்தில் (திக்ருல்லாஹ்) பயிற்சி உள்ளவர்கள் "அல்லாஹ்"வின் பாதுகாப்பை பெற்று ஷைத்தானிடத்தில் இருந்து தப்பி விடுகிறார்கள். இந்த மகத்தானக் கிருபைக்கு இங்கு நாம் எல்லாம் வல்ல "அல்லாஹ்"வுக்கு நன்றி கூற கடமைப்பட்டுள்ளோம்.

# இந்த சில்சிலாவின் சிறப்பு

ஒவ்வொருக் காலக் கட்டத்திலும் அந்தந்த சில்சிலாவில் உயர்ந்த படித்தரங்களைப் பெற்ற வலியுல்லாக்கள் மூலமாக அவர்களின் சீடர்கள் பயிற்சி பெற்று இறைநேசப்படித் தரங்களை அடைந்து கொண்டார்கள்.

இந்தக் காலக்கட்டத்தில் நக்ஷ்பந்தியா அவைசியாவின் மூலம் சுலூக் என்னும் ஆன்மீகப் படித்தரங்களை கடந்து இறைநேசச் செல்வர்களாகும் பாக்கியத்தைப் பெறும் அமைப்பை நமக்கு "அல்லாஹ்" ஏற்படுத்தியுள்ளான். அல்லாஹுத் தஆலா குறிப்பிட்டக் காலக்கட்டத்திற்குப் பின் இதனை வேறு ஒரு சில்சிலாவின் பக்கம் திருப்பி விடவும் கூடும். "அல்லாஹ்"

விரும்பியதை செய்யக் கூடியவன். ஆதலால் ஆன்மீகப் பாதையை விரும்பும் மாணவர் இக் காலகட்டத்தில் இறை தர்பாரிலும், இறை தூதர் தர்பாரிலும் பயண மண்டலங்களை கடந்து அமர வைப்பவர் யார் எனக் கண்டு அதனை அடைந்து கொள்வது அவரின் கடமையாகும்.

உலகப்படிப்பில் டாக்டராக ஆக விரும்பும் மாணவர் பத்தாவது வகுப்பிலே அமர்ந்து இருந்தால் ஒருக்காலும் டாக்டராக ஆக முடியாது. டாக்டர் கல்வியைக் கொடுக்கும் மருத்துவ கல்லூரியில் சேர்ந்து படிக்கும் போதுதான் டாக்டராக ஆகமுடியும். மேலும் படிக்கும்போதே முன்னேற்றத்தை அவர் அறிந்து கொள்வார். அதைப்போல் இந்த சில்சிலாவில் ஒவ்வொரு மாணவரும் தான் கடந்து செல்லும் இறைநேசப் பாதையையும் ஞானப் படித்தரத்தையும் தெளிவாக அறிந்து கொள்வார். இதில் ஒளிவு மறைவு கிடையாது . இந்த சில்சிலாவில் ஞானப்படித்தரத்தின் ஆரம்பமான அஹதிய்யத் திலிருந்து இறுதிநிலையான அப்தால், குதுபு, ஃகௌஸ், சித்தீக்கியத் வரை அழைத்து செல்லப்படுகிறது.

## ஃகல்பி திக்ரின் பயன்கள் :

1.ஃகல்பி திக்ர் செய்வதால் மனஅமைதியும், உள்ளத்தில் நிறைவும் ஏற்படுகிறது. "அல்லாஹ்" திருமறையில் "அறிந்து கொள்ளுங்கள் நிச்சயமாக "அல்லாஹ்"வின் நினைவிலேதான் உள்ளங்கள் சாந்தியடைகின்றன" குர்ஆன் (13:28)

2. தொழுகையில் மனஓர்மை ஏற்படுகிறது.

3. "அல்லாஹ்"வின் திருப்தியும், "அல்லாஹ்"வின் நெருக்கமும் கிடைக்க காரணமாக அமைகிறது.



## தொழுகையில் மனஓர்மையின் அவசியம் :

நாம் அனைவரும் "அல்லாஹ்"வின் பொருத்தத்தைப் பெற்று சுவர்க்கம் பெற வேண்டும், நரகத்தை விட்டுப் பாதுகாக்கப் படவேண்டும் என்ற நோக்கத்தில் தான் "அல்லாஹ்"வை வணக்குகிறோம். ஆனால் யார் உள்ளச்சத்துடன் தொழுகிறார்களோ அவர்களின் தொழுகையை மட்டுமே ஏற்றுக்கொள்வதாக "அல்லாஹ்" கூறுகிறான். "முஃமின்கள் வெற்றி பெற்றார்கள் அவர்கள் யாரென்றால் தங்கள் தொழுகையில் உள்ளச்சத்துடன் தொழுவார்கள்"

(குர்ஆன் 23:1-2)

எவர் உள்ளச்சத்துடன் தொழவில்லையோ அவர்களுடைய தொழுகையை "அல்லாஹ்" ஏற்றுக் கொள்வதில்லை. மாறாக அது அவர்களுக்கு நஷ்டத்தையே விளைவிக்கும் என்றும் கூறுகிறான்.

"தொழுகையாளிகளுக்குக் கேடுதான் அவர்கள் யாரென்றால் தங்கள் தொழுகையில் அலட்சியமாக இருப்பவர்கள்" குர்ஆன் (107:4-5) கேடு என்பதற்கு நரகம் என்று தஃப்சீரில் குறிப்பிடுகிறார்கள்.

சாதாரணமாக நாம் முக்கியமான மனிதருடன் பேசும் போது நாம் அவர் சொல்வதில் கவனம் செலுத்தவில்லை என்றால் அவர் நம்மை விட்டும் முகத்தைத் திருப்பிக் கொள்வார். அதே போல் கண்ணியமுள்ள அல்லாஹ்வின் தர்பாரில் நின்று தக்பீர் கட்டியபின் அல்லாஹ்வின் நினைவைவிட்டும் உலக சிந்தனையை நாம் கொண்டு வருவது "அல்லாஹ்" நம்மை விட்டும் முகம் திருப்பக் காரணமாக அமைகிறது. இது தொழுகை ஏற்றுக் கொள்ளத்தடையாக அமைந்து விடுகிறது.



## தொழுகையின் நோக்கம் :

"தொழுகை என்பது ஒரு முஃமினுக்கு மிஃராஜ் என்ற விண்ணேற்றம் போன்றதாகும்."(நூல் : தப்ரானி)

"தொழுகை என்பது "அல்லாஹ்"விடம் பேசும் ரகசிய பேச்சாகும்."(நூல் : அபூதாவூத்)

"நிச்சயமாக "அல்லாஹ்" உங்கள் உருவத்தையோ பொருள் செல்வத்தையோ பார்ப்பதில்லை. ஆனால் உங்கள் உள்ளத்தையும், நற்செயல்களையும் பார்க்கிறான். (நூல் : புஃஹாரி)

எனவே தொழுகையில் நமது நிலைமையை சரிசெய்ய வேண்டும் என்றால் முதலில் நமது இதயத்தை (ரூஹை) சரி செய்ய வேண்டும். "உடலில் ஓர் சதைத்துண்டு உள்ளது அது சீரடைந்தால், உடல் முழுவதும் சீரடைந்து விடும். அது சீர்கெட்டு விட்டால், உடல் முழுவதும் சீர் கெட்டுவிடும். அது தான் இதயம் (ரூஹ்)" (நூல் : திர்மிதி)

"மனிதன் பாவம் செய்யும் போது அவனின் இதயத்தில் (ரூஹில்) ஓர் கரும்புள்ளி ஏற்படுகிறது." (நூல் : இப்னுமாஜா)

கரும்புள்ளி அதிகப்படும்போது இதயம் (ரூஹ்) மாசுபடுகிறது. அதனால் தான் நமது தொழுகையில் உள்ளச்சம் ஏற்படுவதில்லை. இதற்கு உதாரணமாக நாம் ஒரு கண்ணாடிக் குவளையை கூறலாம். அது அழுக்கடைந்து, மாசு படிந்திருக்கும் நிலையில் நாம் அதில் தண்ணீர், பால், தேன், பழரசம் போன்ற எதை ஊற்றினாலும் அது கெட்டுப் போய்விடுகிறது. மாறாக கண்ணாடிக் குவளையை நன்றாக கழுவிய பின்னர் அதில் எதனை ஊற்றிக் குடித்தாலும் அது உடலுக்கு சத்தாக மாறுகிறது.



அதைப்போலத்தான் பாவங்களின் காரணமாக அழுக்காகி இருக்கும் இதயத்தை (ரூஹை) "அல்லாஹ்"வின் திக்ரைக் கொண்டு சுத்தம் செய்தால் அதற்கு பின்னர் நாம் செய்யும் அமல்களில் பிரகாசம் உண்டாகிறது. நமது தொழுகைகளிலும் உள்ளச்சம் ஏற்படுகிறது. அனைத்து அமல்களிலும் ஓர் இனிமை ஏற்படுகிறது.

## இதயத்தை எவ்வாறு சுத்தம் செய்வது :

அல்லாஹுத் தஆலா அருளியுள்ளான் "நிச்சயமாக தன்னை பரிசுத்தம் செய்தவர் வெற்றி பெற்றார். அவர் யாரென்றால் தன் இரட்சகனின் பெயரை திக்ர் (தியானம்) செய்து கொண்டும், தொழுது கொண்டும் இருப்பார்."

(குர்ஆன் 87:14 -15)

இந்த வசனத்தில் "அல்லாஹ்"வின் பெயரை நினைவு கூர்ந்து திக்ர் செய்வதால் மட்டுமே இதயப் பரிசுத்தம் கிடைக்கும் என்று "அல்லாஹ்" குறிப்பிடுகிறான்.

நபி சல் லல்லாஹு அலைஹி வசல்லம் அருளினார்கள், "ஒவ்வொரு பொருளையும் சுத்தம் செய்வதற்கு ஒரு சாதனம் இருக்கிறது. இதயத்தை (ரூஹை) "அல்லாஹ்" என்ற பெயரை கொண்டுதான் சுத்தம் செய்யமுடியும்." (பைஹகி)

துணிகள் அசுத்தம் அடைந்தால் எவ்வாறு சலவைத் தூளைக்கொண்டு சுத்தம் செய்வோமோ, அதைப்போல் கறைபடிந்து இருக்கும் நமது இதயத்தை "அல்லாஹ்" என்ற திக்ரைக் கொண்டு தான் சுத்தம் செய்ய வேண்டும்.

**ஃகல்பிதிக்ருக்கு குர்ஆன் ஹதீஸில் ஆதாரம் :**

எந்த முறையில் திக்ர் செய்ய வேண்டும் என்பதனை "அல்லாஹ்" சூரா அஃராஃபில் குறிப்பிடுகின்றான்.

"உம்முடைய மனதிற்குள் பணிவுடனும், பயத்துடனும், சப்தமில்லாமலும், நாவை அசைக்காமலும், காலையிலும், மாலையிலும் உமது இரட்சகனைத் திக்ர் (தியானம்) செய்வாயாக! (நினைவு கூர்வாயாக) அவனை மறந்தவர்களில் ஒருவராக நீர் ஆகிவிடவேண்டாம்." (குர்ஆன் 7:205)

"நபி சல்லல்லாஹு அலைஹி வசல்லம் அவர்கள் எல்லா நேரமும் "அல்லாஹ்"வின் நினைவிலே திளைத்து இருப்பார்கள்" என ஆயிஷா சித்தீக்கா ரலியல்லாஹுத் தஆலா அன்ஹா குறிப்பிடுகிறார்கள் (நூல் : திர்மிதி

**ஃகல்பிதிக்ர் ஏன் செய்ய வேண்டும் ?**

நமது உடலில் இதயம், நுரையீரல், சிறுநீரகம் போன்ற பல உறுப்புக்கள் இருப்பது போல நமது ரூஹுக்கும் ஏழு உறுப்புக்கள் உள்ளன. அதனை நுண்பொருள் (லத்தீஃபாக்கள்) என குறிப்பிடுவார்கள்.

உடம்பை "அல்லாஹ்" மண்ணைக் கொண்டுப் படைத்தான். எனவே உடம்புக்கு உணவாக, மண்ணில் இருந்து உற்பத்தியாகும், காய்கறிகள், கனிகள், அரிசி, கோதுமை மற்றும் புல்லைத்தின்று வளரும் ஆடு,மாடு,கோழி இவற்றின் கறிகளும் உணவாக ஆகிறது.

களிமண்ணால் உடம்பை படைத்த "அல்லாஹ்" அதில் தனது ரூஹை ஊதினான். உடனே அது உயிர் பெற்று எழுந்தது. எனவே மண்ணால் படைக்கப்பட்ட உடம்புக்கு எவ்வாறு மண்ணில் விளையும் பொருட்கள் உணவாக அமைகிறதோ, அதைப்போல் "அல்லாஹ்"வின் ஒளியினால்



ஊதப்பட்ட மனித உடலில் ரூஹுக்கு இதயத்தில் (ரூஹினுல்) செய்யும் "அல்லாஹ்" என்ற திக்ரே உணவாக அமைகிறது.

இந்த "அல்லாஹ்" என்ற திக்ரை ஃகல்பில் செய்யும் போது நமது ரூஹு (ஆத்மா) பரிசுத்தம் அடைந்து வளர்ச்சி அடைகிறது. அப்போது அது தான் யார் என்பதையும், "அல்லாஹ்"வின் மாபெரும் வல்லமைமையும், ஆற்றலையும் உணருகிறது. மேலும், அது மறைவான ஞான இரகசியங்களையும் அறிகிறது. இதைத்தான் நபி (சல்) அவர்கள் "தன்னை அறிந்தவர் தன் இறைவனை அறிந்து கொண்டார்." என்று குறிப்பிட்டார்கள். (நூல் : பைஹகி)

இதயத்தில் (ரூஹில்) "அல்லாஹ்," "அல்லாஹ்" என்ற திக்ரை அதிகமாகச் செய்வதால் இதயம் (ரூஹ்) தூய்மை பெற்று "அல்லாஹ்" எந்த நேரமும் தன்னைப் பார்த்துக் கொண்டு இருக்கிறான் என உணர ஆரம்பிக்கிறது. இதனைத்தான் நபி (சல்) அவர்கள் "நீ வணங்கும்போது "அல்லாஹ்"வை நீ பார்த்துக் கொண்டிருக்கிறாய் என நினைத்து வணங்கவேண்டும். நீ "அல்லாஹ்"வை பார்க்காவிட்டாலும், "அல்லாஹ்" உன்னைப் பார்த்துக் கொண்டிருக்கிறான். இதுதான் இஹ்சான்" என்று குறிப்பிட்டார்கள். (நூல் : முஸ்லிம்)

ஃகல்பிதிக்ர் செய்வதனால் தொழுகையில் உள்ளச்சம் ஏற்படுகிறது. இதைத்தான் "அல்லாஹ்" முஃமின்கள் வெற்றி பெற்றார்கள். அவர்கள் யாரென்றால் தொழுகையில் உள்ளச்சத்துடன் தொழுவார்கள். என்று குறிப்பிடுகிறான். மேலும் ஆரம்பப் பள்ளி மாணவர்கள் உரக்கச் சத்தமிட்டு படிப்பதையும், அல்லது மதரசா அரபி மொழிப் பயிற்சி பெறும் மாணவர்கள் உரக்கச் சப்தமிட்டு ஓதுவதையும் நாளடைவில் அம்மாணவர்கள் பண்பட்டு



முதிர்ச்சியடைந்து உயர்தரக் கல்வி அமைப்பில் பயிலும் போது எவ்வித சப்தமில்லாமல் படிப்பது,அல்லது ஓதுவதைக் காண்கிறோம். இந்த முதிர்ச்சி நிலையைதான் எல்லாம் வல்ல "அல்லாஹ்" நம்மிடத்திலே காணவிரும்புகிறான்.

**கல்பி திக்ரின் லத்தீஃபாக்கள் அமைந்துள்ள இடம் :**

உடம்பில் பல உறுப்புகள் உள்ளது போல ரூஹுக்கும் 7 உறுப்புகள் உள்ளன. அதனை அரபியில் லத்தீஃபா (நுண்பொருள்) எனக்கூறுவர்.

**<u>1வது லத்தீஃபா (ஃகல்பு) :</u>**

இது இடது பக்க நெஞ்சின் கீழ் அமைந்துள்ளது. இங்குதிக்ர் செய்யும் போது முதல் வானத்திலிருந்து செய்யதினா ஆதம் (அலை) அவர்களின் தரப்பிலிருந்து வெளிர் பச்சை நிற ஒளி இறங்குகிறது.

**<u>2வது லத்தீஃபா (ரூஹ்) :</u>**

வலதுபக்க நெஞ்சின் கீழ் உள்ளது. இரண்டாம் வானத்தில் செய்யதினா நூஹ் (அலை), செய்யதினா இப்றாஹிம் (அலை) அவர்களின் தரப்பிலிருந்து பொன் நிற ஒளி இறங்குகிறது.

**<u>3வது லத்தீஃபா (சிர்ரி) :</u>**

இடது பக்க நெஞ்சின் மேல்பகுதியில் உள்ளது. இங்கு மூன்றாம் வானத்திலிருந்து செய்யதினா மூசா (அலை) மற்றும் ஹாரூன் (அலை) அவர்களின் தரப்பிலிருந்து வெள்ளைநிற ஒளி இறங்குகிறது.



**<u>4வது லத்தீஃபா (ஃகஃபி) :</u>**

வலது பக்க நெஞ்சின் மேல்பாகத்தில் உள்ளது. இங்கு நான்காம் வானத்திலிருந்து செய்யதினா நபி ஈசா (அலை) அவர்களின் தரப்பிலிருந்து கருநீல நிற ஒளி இறங்குகிறது.

**<u>5வது லத்தீஃபா (அஃக்ஃபா)</u>**

நெஞ்சுப் பகுதியின் நடுவில் உள்ளது. ஐந்தாம் வானத்திலிருந்து அகில உலகத்தின் அருட்கொடை ஈருலகத்தின் ரஹ்மத்தாகிய செய்யதினா முஹம்மது முஸ்தஃபா (சல்) அவர்களின் தரப்பிலிருந்து பச்சை நிற ஒளி இறங்குகிறது.

**<u>6வது லத்தீஃபா (நஃப்ஸ்) :</u>**

நெற்றியின் நடுமையத்தில் உள்ளது. இதில் ஆறாவது வானத்திலிருந்து ஐந்து நிறங்கள் ஒன்றன்பின் ஒன்றாகவோ அல்லது வெள்ளை நிற ஒளி மட்டும் தனித்தோ இறங்குகிறது.

**<u>7வது லத்தீஃபா (சுல்தானுல் அத்கார்) :</u>**

உச்சந்தலையின் நடு மத்தியில் அமைந்து உள்ளது. இதில் ஏழாம் வானத்திலிருந்து ஆறாவது லத்தீஃபாவில் இறங்கியது போன்று ஒளி இறங்குகிறது.

அனைத்து ஒளிகளும் அல்லாஹ்வின் புறத்தில் இருந்து ஒவ்வொர் வானம் வழியாக இறங்குகிறது. இந்த ஒளி இரத்த நாளங்களின் ஒவ்வொரு அணுவிலும் ஊடுருவி வெளியேறுவதால், இந்த ஒளியின் தாக்கத்தால் இரத்த நாளங்களில் ஓடிக்கொண்டிருக்கும் ஷைத்தானின் பலம் குன்றி ரூஹின் பலம் அதிகரிக்கிறது. இதனால் ரூஹில் நற்பண்புகள் வளர்கிறது. தீமையின் சக்தி குறைகிறது.

## உடல் அமைப்பில் லத்தீஃபாக்களின் விபரம்




# ஃகல்பி திக்ர் (ஆழ்நிலை தியானம் செய்யும் முறை

## ஆரம்பத்தில் அமரும் முறை

கிப்லாவை முன்னோக்கிக் கண்களை மூடி அமர வேண்டும். வலது பக்கம் "அல்லாஹ்"வின் புறத்திலிருந்து ஒளி ஷேஃகின் இதயத்தின் (ரூஹின்) மூலமாக தன்னுடைய இதயத்திற்கு (ரூஹிற்கு) வருவதாக நினைக்க வேண்டும்.



## ஆரம்பத்தில் ஓதவேண்டியவை

1.மூன்றாம் கலிமா : சுப்ஹானல்லாஹி வல்ஹம்து லில்லாஹி வலா இலாஹ இல்லல்லாஹு வல்லாஹு அக்பர்-வலா ஹவ்ல வலா குவ்வத்த இல்லாபில்லாஹில் அலிய்யில் அளீம் (1தடவை)

2. இஸ்திஃக்ஃபார் : (அஸ்தஃக்ஃபிருல்லாஹ ரப்பீ மின்குல்லிதன் பின் வ அத்தூபு இலைஹி) (1 தடவை)

3. இரண்டாம் கலிமா : அஷ்ஹது அன்லா இலாஹ இல்லல்லாஹு வ அஷ்ஹது அன்ன முஹம்மதன் அப்துஹு வரசூலுஹு (1 தடவை)

4. அவூது பில்லாஹி மினஷ்ஷைத்தானிர் ரஜீம் (1தடவை)

5. பிஸ்மில்லாஹிர் ரஹ்மானிர்ரஹீம் (1தடவை)

### பயிற்சி முறை

முதல் லத்தீஃபா :

மூச்சை உள் இழுக்கும் போது "அல்லாஹ்" என்று மனதில் நினைத்து அது ஒன்றாவது லத்தீஃபாவாகிய இடதுபக்க நெஞ்சின் கீழ்பாகத்தின் உள்ளேசெல்வதாக நினைக்க வேண்டும். மூச்சை வெளியே விடும்போது"ஹு" என்று அதன் மேலே 1வது லத்தீஃபா மேல் தாக்குவது போல விடவேண்டும். இதனை ஐந்து நிமிடம் செய்ய வேண்டும்.

மூச்சை "அல்லாஹ்" என்று உள் இழுக்கும்போது தலையை மேலே உயர்த்தியும். "ஹு" என்று வெளியில் விடும்போது தலையை தாழ்த்தியும், மேலும் கீழும் தலையை அசைத்து வேகமாக இப்பயிற்சியை செய்வது, வெகு விரைவில் உயர் ஞான படித்தரங்களை அடையக் காரணமாக அமைகிறது.



**இரண்டாம் லத்தீஃபா :**

மூச்சை உள் இழுக்கும் போது "அல்லாஹ்" என்று ஒன்றாவது லத்தீஃபாவில் உள் இழுத்து ஹு என்று நினைத்து இரண்டாவது லத்தீஃபாவில் தாக்குவது போல விடவேண்டும். இதனை ஐந்து நிமிடம் செய்ய வேண்டும்.

**மூன்றாம் லத்தீஃபா :**

வழக்கம்போல் "அல்லாஹ்" என்று நினைத்து மூச்சை ஒன்றாவது லத்தீஃபாவில் இழுத்து ஹு என்று நினைத்து மூன்றாவது லத்தீஃபாவில் தாக்க வேண்டும். இதனை ஐந்து நிமிடங்கள் செய்ய வேண்டும்.

**நான்காம் லத்தீஃபா :**

ஒன்றாவது லத்தீஃபாவில் "அல்லாஹ்" என்று இழுத்து ஹு என்று நான்காவது லத்தீஃபாவில் தாக்க வேண்டும். இதனை ஐந்து நிமிடங்கள் செய்ய வேண்டும்.

**ஐந்தாம் லத்தீஃபா :**

ஒன்றாவது லத்தீஃபாவில் "அல்லாஹ்" என்று இழுத்து ஐந்து லத்தீஃபாக்களிலும் ஹு செல்வதாக நினைத்து தாக்க வேண்டும். இதனை ஐந்து நிமிடங்கள் செய்ய வேண்டும்.

**ஆறாம் லத்தீஃபா :**

ஒன்றாவது லத்தீஃபாவில் "அல்லாஹ்" என்று இழுத்து ஆறாவது லத்தீஃபா நெற்றி வழியாக ஹு வெளிச் செல்வதாக நினைத்து ஹு வை வெளியேற்ற வேண்டும் இதனை ஐந்து நிமிடங்கள் செய்ய வேண்டும்.

**ஏழாம் லத்தீஃபா :**

ஒன்றாவது லத்தீஃபாவில் "அல்லாஹ்" என்று இழுத்து ஹு என்று உச்சந்தலையில் அடிக்க வேண்டும். அப்பொழுது தலையில் இருந்து கை, கால்கள், வழியாக ஒளி செல்வதாகவும், உடம்பில் உள்ள ஒவ்வொரு அணுவிலும் "ஹு" பிரகாசமாக வெளியேறுவதாகவும் நினைக்க வேண்டும். இதனை ஐந்து நிமிடங்கள் செய்ய வேண்டும்.



**ஒன்றாம் லத்தீஃபா :**

கடைசியாக ஒரு நிமிடம் மட்டும் ஒன்றாவது லத்தீஃபாவில் "அல்லாஹ்" என்று இழுத்து ஹு என்று அதன் மேல் தாக்கவேண்டும்.

**முராக்கபா ("அல்லாஹ்"வின் சிந்தனையில் மூழ்குதல் :**

முராக்காபாவில் உடலுக்கு ஓய்வு கொடுத்த நிலையில் எந்தவித சலனமில்லாமல் அமைதியாக அமர்ந்து கண்களை மூடிய நிலையிலேயே, மூச்சை இயல்பான நிலையில் "அல்லாஹ்" என்று உள் இழுத்து, ஹு என்பதை, "அல்லாஹ்"வின் அர்ஷ் நமது முன்னால் இருப்பதாக நினைத்து, அந்த அர்ஷை நோக்கி ஹு வை செலுத்த வேண்டும். அர்ஷிலிருந்து ஒளி தனது இதயத்திற்கு வருகிறது என்று நினைக்க வேண்டும். இதே நிலையில் கண்ணைமூடி 5 நிமிடங்கள் அமர்ந்து இருக்க வேண்டும். பின்னர் துஆ ஓதி முராக்காபாவை முடித்துக்கொள்ள வேண்டும். இந்த ஃகல்பி திக்ர் பயிற்சியை ஷேஃகிடமோ அல்லது இதனை பயிற்சிபெற்ற மாணவர்களிடமோ முறையாகக் கற்றுக் கொள்ள வேண்டும்.

**திக்ர் செய்யும் நேரம் :**

இந்த ஃகல்பி திக்ரை காலையில் தஹஜ்ஜுத் நேரத்திலும், தஹஜ்ஜுத் தவறியவர்கள், ஃபஜ்ருக்கு பின்னரும் செய்ய வேண்டும். மாலை திக்ரை அசருக்குப் பின்னால், அல்லது மஃரிபுக்குப் பின்னால், அல்லது இஷாவிற்குப் பின்னால், அல்லது தூங்குவதற்கு முன்னால் செய்ய வேண்டும்.

**பயிற்சி செய்ய கால அளவு :**

ஆரம்பத்தில் திக்ர் 20 நிமிடமும் முராக்கபா 5 நிமிடம் செய்து பழகவேண்டும். பின்னர் சிறிது சிறிதாக நேரத்தை கூட்டி ஒரு லத்தீஃபாவுக்கு 5 நிமிடம் வீதம் ஏழு லத்தீஃபாக்களுக்கு 7x5=35 நிமிடமும், 10 நிமிடம் முராக்கபாவும் செய்ய வேண்டும். ஆக குறைந்தபட்ச திக்ர் காலை 45 நிமிடமும் மாலை 45 நிமிடமும் செய்து பழக வேண்டும்.

வெளிரங்க அமல் செய்வதற்கு உடல், உடை சுத்தமாக இருப்பது அவசியம். ஃகல்பி திக்ர் இதயத்தில் (ரூஹில்) செய்வதால் இதற்கு உடல், உடை சுத்தமாக இருக்க வேண்டும். என்ற அவசியமில்லை. ஃகல்பி திக்ரை எல்லா நிலைகளிலும், எல்லா நேரங்களிலும் செய்யலாம். குறிப்பாக பெண்கள் இந்த ஃகல்பிதிக்ரை ஒளூ இல்லாத நேரங்களிலும், மாதவிலக்கு, நிஃபாசுடைய நாட்களிலும் கூட செய்யலாம்.

**ஃகல்பி திக்ரின் சிறப்பு :**

இதனை முறையாக செய்பவர்களின் இதயம் பிரகாசிக்கும். இதன் காரணமாக ஆத்மா (ரூஹ்) பரிசுத்தம் அடைந்து தொழுகையில் உள்ளச்சம் உண்டாகும். இது தொழுகையை ஏற்றுக்கொள்ளக் காரணமாக அமையும், மறுமையின் வெற்றிக்கு உதவி புரியும். தொழுகையில் மன ஓர்மையும், உள்ளச்சமும் மட்டும் போதும் என்பவர்களுக்கு காலையில் 45 நிமிடமும், மாலையில் 45 நிமிடமும் ஃகல்பிதிக்ர் பயிற்சி செய்வது போது மானதாகும்.



**விலாயத் என்னும் ஞானப்படித்தரங்கள் :**

எவர் ஒருவர் தாங்களும் ஓர் இறை நேசராக ஆக வேண்டும், விலாயத் என்னும் ஞானப்படித்தரங்களைக் கடந்து, இறை நெருக்கத்தை அடைய விரும்புகிறார்களோ, அவர்கள் இந்தக் ஃகல்பி திக்ர் பயிற்சியை தினமும் செய்ய வேண்டும்.

மேலும், ஃபர்லான சுன்னத்தான தொழுகைகளுடன், தஹஜ்ஜுத், இஷ்ராக், ளுஹா, அவ்வாபீன் போன்ற தொழுகைகளையும் தொழுது வர வேண்டும். நபி சல்லல்லாஹு அலைஹி வசல்லம் அவர்களின் சுன்னத்துகளைப் பேணி நடக்க வேண்டும். இவர்கள் ஷேஃகை சந்திக்கும் போது, இவர்களை திக்ரில் அமரவைத்து முராக்கபாவில் ஞானப் படித்தரங்களைக் கடக்க வைப்பார்கள்.

இந்த ஞானப்படித்தரங்களைப் பயிற்சி செய்யும் அனைவரும் பெற்றுக்கொண்டு பின்னர் அவரவர்கள் இடத்திலேயே பயிற்சியை தொடர்ந்து செய்து வரலாம்.

**குர்ஆனில் திக்ரின் வசனங்கள் :**

1. "அல்லாஹ்" கூறுகிறான் "விசுவாசிகளே "அல்லாஹ்"வை அதிகமதிகமாக திக்ர் செய்யுங்கள்" (குர்ஆன் 33 : 41)

2. அவர்கள் நின்ற நிலையிலும், அமர்ந்த நிலையிலும், தங்கள் விலாப்புறங்களின் மீது சாய்ந்த நிலையிலும் "அல்லாஹ்"வை (திக்ர்) நினைவு கூறுவார்கள் (குர்ஆன் 3 : 191)

3. நிச்சயமாக "அல்லாஹ்"வை திக்ர் செய்வது தான் மிக உயர்ந்தது (குர்ஆன் 29 : 45)

இன்னும் 40க்கும் அதிகமான வசனங்கள் குர்ஆனில் காணப்படுகின்றது.



## ஹதீசில் திக்ருக்கு ஆதாரம்

1.திக்ரில் சிறந்தது மறைவாக செய்யும் ஃகல்பி திக்ர்தான் (பைஹக்கி)

2.திக்ர் செய்பவர்களுக்கும், திக்ர் செய்யாதவர் களுக்கும் உதாரணம் உயிர் உள்ளவர்களுக்கும், இறந்தவர் களுக்கும் உள்ள உதாரணம் போன்றதாகும். (அபூதாவூது)

எவர்கள் இந்த ஃகல்பி திக்ரை காலை மாலை செய்து வருகிறார்களோ, அவர்களுடைய மூச்சும், இதயமும் (ரூஹும்) 24 மணி நேரமும் "அல்லாஹ்" என்ற திக்ரிலே திளைத்து இருக்கும். இதனை நாம் அறிய சிறிது நேரம் கண்ணை மூடி மூச்சை கவனித்தால் உள்ளே செல்லும் மூச்சு "அல்லாஹ்" என்றும் வெளியில் வரும் மூச்சு ஹு என்றும் வருவது தெரியும். ஆகவே ஃகல்பி திக்ர் செய்பவர்கள் அதிகமாக திக்ர் செய்பவர்களின் பட்டியலில் "அல்லாஹ்"வின் அருளால் வந்து விடுவார்கள்.

## முராக்கபாவிற்கு ஆதாரம்

எல்லாம் வல்ல "அல்லாஹ்" குர்ஆனில் (அறிவுடைய) இத்தகையோர் (தங்கள்) நிலையிலும் இருப்பிலும் தங்கள் படுக்கையிலும் "அல்லாஹ்"வையே நினைத்து, வானங்கள் பூமியின் படைப்பைப்பற்றிச் சிந்துத்து "எங்கள் இறைவனே!" நீ இவற்றை வீணுக்காகப் படைக்கவில்லை. நீ மிகவும் தூயவன். (நரக ) நெருப்பின் வேதனையிலிருந்து எங்களை நீ இரட்சிப்பாயாக! (சூரா : ஆல இம்ரான் : 3-191)

ஒரு மணி நேரம் இறை சிந்தனையில் மூழ்கி இருப்பது எழுபது வருடங்களின் வணக்கத்தை விடவும் சிறந்தாகும்.

(நூல் – தபரானி)

இதுதான் முராக்கபாவிற்கு ஆதாரமாக விளங்குகிறது.



**ஃகல்பி திக்ரின் நோக்கம் :**

இந்த நவநாகரீக காலத்தில் மக்கள் மன அமைதி இல்லாமல் பல பிரச்சனையில் தவித்துக் கொண்டிருக்கிறார்கள். இன்னும் மன அமைதியைத் தேடி முஸ்லிம்களில் பலர் மாற்று மத ஆசிரமங்களுக்குச் சென்று தவ்ஹீதுக்கு விரோதமானவர்களுடன் அமர்ந்து அவர்கள் சொல்லி கொடுக்கும் தியானங்களைச் செய்கிறார்கள். இதனால் ஷிர்க்கான பல விஷயங்கள் அவர்களை அறியாமலேயே உள்ளத்திலும் ஊடுருவி இஸ்லாத்தைவிட்டே வெளியேறும் சூழ்நிலை ஏற்படுகிறது. இது நரகம் செல்ல காரணமாக ஆகிவிடுகிறது. ஆனால் மனச்சாந்தி, மனஅமைதி "அல்லாஹ்"வின் பெயருடைய திக்ரில் தான் இருக்கிறது என "அல்லாஹ்" தெளிவாக குர்ஆனில் குறிப்பிடுகின்றான்.

"நிச்சயமாக அறிந்துகொள்ளுங்கள் அல்லாஹ்வின் திக்ரில் தான் மனச்சாந்தி கிடைக்கிறது" (குர்ஆன் 13 : 28)

ஆகவே ஃகல்பி திக்ரின் மூலமாக மனஅமைதியும், "அல்லாஹ்"வின் நெருக்கமும் கிடைக்கும்.

**ஃகல்பிதிக்ரின் உடல் ரீதியான நன்மை**

இன்றைய காலக்கட்டத்தில் இதயம், நுரையீரல் சம்பந்தப்பட் நோய்கள் வராமல் இருப்பதற்கும் உடலின் ஆரோக்கியத்திற்கும், சுவாசப் பயிற்சி செய்யும்படி பெரும் பாலான மருத்துவர்கள் ஆலோசனை கூறுகிறார்கள்.

ஏனென்றால் சுவாசப்பயிற்சியை வேகமாக செய்வதால் இரத்த ஓட்டம் அதிகரிக்கிறது. மேலும் இரத்தம் உஷ்ணமாகிறது இதனால் இதயத்தின் இரத்த நாளங்களில் இருக்கும் (Cholesterol) என்ற கொழுப்பு கரைகிறது.

இந்த (Cholesterol) என்ற கொழுப்புதான் இரத்த நாளங்களில் அடைப்பை ஏற்படுத்தி அதன் காரணமாக (Heart Attack) மாரடைப்பு ஏற்படுகிறது. ஆனால் சுவாசப்பயிற்சி செய்பவர்களின் கொழுப்பு கரைந்து விடுவதால் இவர்களுக்கு மாரடைப்பு வருவதில்லை.

சுவாசப் பயிற்சியின் காரணமாக இரத்த ஓட்டம் சீராக இருப்பதால் இரத்த அழுத்தமும் (Blood Preassure) சீராக இருக்கிறது.

நுரையீரல் அதிகமாகி சுருங்கி விரிவதால் உடலுக்கு தேவையான பிராணவாயு (oxygen) முழுமையாக உள்இழுக்கப்படுகிறது. இது இரத்தத்துடன் அதிக அளவில் கலந்து ஒவ்வொரு செல்லுக்கும் செல்வதுடன் உடலின் ஒவ்வொரு உள், வெளி உறுப்புகளுக்கு பரிபூரண சக்தி கிடைப்பதால் அனைத்து உறுப்புகளும் பலப்பட்டு சீராக இயங்க ஆரம்பிக்கின்றன.

இதனால் உடம்பில் நோய் எதிர்ப்பு சக்தி ஏற்படுகிறது. உடலின் இளமையும் பாதுகாக்கப் படுகின்றது. மேலும் நுரையீரல் நல்லமுறையில் சுருங்கி விரிவதால் காசநோய் ஆஸ்துமா போன்ற நோய்கள் நம்மை அண்டுவதில்லை. இன்னும் அதிகமான நன்மைகள் கிடைக்கின்றன.

ஒரு தொழிற்சாலை இயங்குவதற்கு போதிய அளவு மின்சாரம் அவசியம் தேவைப்படுகிறது. அதே சமயம் மின்சார அளவு குறைந்தால் அங்குள்ள இயந்திரங்களின் இயக்கங்கள் குறைந்து உற்பத்தியும் குறைகிறது.

அதைப் போல் நமது உடம்பில் உள்ள உறுப்புகள் சரியாக இயங்கப் போதிய அளவுப் பிராணவாயு



தேவைப்படுகிறது. பிராணன் என்றால் உயிர் என்று அர்த்தம். எனவே நாம் உயிர் வாழ உடம்பில் உள்ள மின்சாரம்தான் பிராணவாயு (காற்று) ஆகும்.

பிராணவாயுவின் அளவு குறையும் போது உள் உறுப்புக்கள் இயக்கம் குறைந்து நோய் உண்டாகிறது. எனவே காலை, மாலை சுவாசப்பயிற்சி செய்யும் போது உடம்புக்குத் தேவையான பிராணவாயு (Oxygen) கிடைக்கப்பெற்று உடல் ஆரோக்கியம் பாதுகாக்கப்படுகிறது.

மேலும் இரவின் முன்பகுதியில் தஹஜ்ஜுத் நேரத்தில் தூய்மையான ஓசோன் வாயு பூமியில் இறங்குகிறது. இந்த சமயத்தில் மூச்சுப் பயிற்சி செய்யும் போது உடல் ஆரோகியத்திற்கு தேவையான விஷேசமான தூய்மையான வாயு கிடைக்கிறது.

இது உடம்பு ரீதியான நன்மையாகும். இதனால் தான் பெரும் பாலான டாக்டர்கள் காலை மாலை குறைந்தது 30 நிமிடங்கள் சுவாசப்பயிற்சி செய்யும்படி கூறுகிறார்கள். சுவாசப்பயிற்சி முறையாக செய்வது எவ்வாறு என இப்பொழுது பல அமைப்புகளில் பயிற்சி அளிக்கிறார்கள்.

"அல்லாஹ்"வின் மாபெரும் கிருபையால் மூச்சுப்பயிற்சியுடன் "அல்லாஹ்" என்ற திக்ரையும் சேர்த்து செய்வதால் நமக்கு உடல் ஆரோக்கியமும், ஆன்மீகப்பலமும் கிடைக்கிறது. **(அல்ஹம்துலில்லாஹ்.....)**

**ஃகல்பி திக்ரின் ஆன்மீக ரீதியான நன்மை**

ஒவ்வொரு குழந்தை பிறக்கும் போதும் ஓர் ஷைத்தானும் சாட்டப்படுகிறது. ஷைத்தான் உடலின் இரத்த நாளங்களில் ஓடுவதால் தீமையான ஊசலாட்டங்களை மனதில் ஏற்படுத்துகிறான்.



மனிதனிடத்தில் நஃப்ஸ் என்ற மனோ இச்சையும் இருக்கிறது. அதேபோல் ரூஹ் என்ற ஆத்மாவும் இருக்கின்றது. ரூஹ் பலவீனமாக இருக்கும்போது, உடம்பில் ஷைத்தானின் ஆதிக்கமும், மனோ இச்சையும் அதிகமாக ஆதிக்கம் செலுத்துகிறது.

ரூஹை பலமடையச் செய்ய வேண்டுமானால் "அல்லாஹ்" என்ற திக்ரை ஃகல்பில் செய்ய வேண்டும். இந்தக் ஃகல்பிதிக்ரைச் செய்யும் போது ஆத்மா பலமடைந்து ரூஹ் வளர்ச்சி அடைகிறது. ரூஹ் பலமாக இருக்கும் போது ஷைத்தானின் ஆதிக்கம் குறைகிறது.

மேலும் இந்தக் ஃகல்பி திக்ரை அதிகமாகச் செய்யும் போது, தீமையை ஏவும் நஃப்சே அம்மாரா, பாவங்களைத் தடுத்து தன்னைத்தானே நிந்திக்கும் நஃப்சே லவ்வாமா ஆக மாறுகிறது. மேலும் இது ஃகல்பி திக்ரின் பரக்கத்தால் நன்மையை மனதில் உதிக்கச்செய்யும் நஃப்சே முல்ஹிமா ஆக மாறுகிறது.

மேலும் ஃகல்பி திக்ர் செய்யும் போது நப்சே முத்மஇன்னா (சாந்தி பெற்ற நஃப்ஸ்) நஃப்சே ராளியாவாகவும், நஃப்சே மர்ளிய்யாவாகவும் ("அல்லாஹ்"வின் திருப்தி பெற்ற ஆத்மாவாக) மாறுகிறது.

இதைத்தான் "அல்லாஹ்" குர்ஆனில் "சாந்தி பெற்ற ஆத்மாவே ! நீ உன் இறைவன்பால் திருப்தி அடைந்த நிலையிலும் ("அல்லாஹ்") உன் மீது திருப்தி அடைந்த நிலையிலும் மீளுவாயாக! மேலும் நீ என் நல்லடியார்களுடன் இணைவாயாக! மேலும் நீ என் சொர்க்கத்தில் பிரவேசிப் பாயாக."(குர்ஆன் 89 : 28-31) எனக் கூறுகிறான்.



"அல்லாஹ்"வின் திருப்பொருத்தத்துடன் சொர்க்கம் செல்லும் பாக்கியம் கிடைக்கிறது.

மேலும் ஃகல்பி திக்ரின் பரக்கத்தால் இது நஃப்சே காமிலாவாக (முழுமைபெற்ற ஆத்மாவாக) மாறுகிறது. எனவே நஃப்சை கட்டுப்படுத்தி அடக்கி நமது பொறுப்பில் கொண்டு வரும் சக்தியும், "அல்லாஹ்"வின் திருப்தி அடையும் பாக்கியமும் இந்தக் ஃகல்பி திக்ரின் பொருட்டால் கிடைக்கிறது.

**ஃகல்பிதிக்கும் நற்குணமும் :**

"அல்லாஹ்", "அல்லாஹ்" என்ற திக்ரை ஃகல்பிலே அதிகமாகச் செய்யும் போது ரூஹ் அல்லாஹ்வின் ஒளியைக் கொண்டு பிரகாசம் அடைகிறது. அதனால் ஆத்மாவில் நற்பண்பு வளர்கிறது. இதனால் ஃகல்பிதிக்ர் செய்பவர்கள் நற்குணமுடையவராக திகழ்கிறார்கள்.

மேலும் தாங்கள் செய்யும் வேலையை மனஓர்மையுடனும், சிறப்பாகவும் செய்யக் கூடிய ஆற்றலும் அவர்களுக்கு கிடைக்கிறது.

திக்ருடைய நேரம் காலை, மாலை 45 நிமிடங்களே ஒதுக்குவதால், மீதம் உள்ள நேரங்களில் தங்களின் அனைத்து வேலைகளையும் சிறப்பாகச் செய்யக்கூடிய விஷேச சக்தியை திக்ர் செய்யக் கூடியவர்கள் பெற்றுக் கொள்கிறார்கள்.

பெற்றோர்கள், பிள்ளைகள், மனைவி மற்றும் உறவினர்களுக்கு செய்ய வேண்டிய கடமைகளை சிறப்பான முறையில் செய்ய மனவிருப்பமும், ஆர்வமும் உண்டாகிறது. மேலும் தாங்கள் செய்யும் வியாபாரத்தையும், தங்கள்

பொறுப்பில் உள்ள பணிகளையும் சிறப்புறச்செய்ய மனப்பயிற்சியும், மனப்பக்குவமும், சமுதாய மக்களுக்கு தொண்டு செய்யும் ஆர்வமும் உண்டாகிறது.

இந்த திக்ர் பயிற்சி மனைவி, மக்களை, வீட்டை விட்டும் தூரப் படுத்தும் பயிற்சி அல்ல. மாறாக உலக வாழ்க்கையை சீரும் சிறப்புமாக மாற்றும் மனப் பயிற்சியின் களமாக அமைகிறது.

இதைத்தான் நபி சல்லல்லாஹூ அலைஹி வசல்லம் அவர்கள் குறிப்பிட்டார்கள்.

“அறிந்து கொள்ளுங்கள், உடலில் ஓர் சதைத்துண்டு இருக்கிறது. அது சீரடைந்தால் உடல் முழுவதும் சீரடைந்து விடும். அது சீர்கெட்டால் உடல் முழுவதும் சீர்கெட்டுவிடும் அது தான் இதயம்.” (நூல் திர்மிதி

இந்த ஹதீசின் அடிப்படையில் இதயத்தை பரிசுத்தப்படுத்தி, பக்குவப்படுத்தும் ஆன்மீகக் கேந்திரமாக இந்த திக்ர் மஜ்லிஸ் அமைந்துள்ளது.

மனிதனின் உள்ளத்தில் இருக்கும் ஆற்றலைப் பக்குவப்படுத்தி, அதனை சரியான முறையில் இயங்கச்செய்யும் பாசறையாகத் தான் இந்தத் தியான மையம் (திக்ர் மஜ்லிஸ்) அமைந்துள்ளது.

இவற்றுக் கெல்லாம் மேலாக “அல்லாஹ்”, “அல்லாஹ்” என்று மனதினால் “அல்லாஹ்”வை அதிகமாக நினைவு கூர்ந்து அல்லாஹ்வை திக்ர் செய்யும் போது அல்லாஹ்வின் தொடர்பு நமது இதயத்துடன் (ரூஹுடன்) ஏற்படுகிறது. இதனால் “அல்லாஹ்” என்னை கண்காணித்துக்கொண்டு இருக்கிறான்.



“அல்லாஹ்”வின் பாதுகாப்பில் நான் இருக்கிறேன் என்ற உணர்வு நமக்கு ஏற்படுகிறது. இதனால் எந்த தேவையையும் “அல்லாஹ்”விடம் கேட்டுப் பெறக்கூடிய பக்குவம் இந்த திக்ரின் மூலம் கிடைக்கிறது.

மேலும் ஒவ்வொரு காலத்திலும் கரையில் நின்று கடல் தண்ணீரின் நிறம் நீலமாகத்தானே காட்சியளிக்கிறது. இதற்குள் எப்படி முத்தும், பவளமும், அம்பரும் கிடைக்கும் என்று ஷைத்தானின் உதவியுடன் இந்த வழிமுறையை ஏளனம் செய்பவரும் இருக்கத்தான் செய்கிறார்கள்.

கடலில் உள்ள விலை மதிப்பற்ற முத்து, வைடூரியங்களை நாம் அடைய வேண்டுமென்றால், கரையில் நின்று வேடிக்கைப் பார்ப்பதினால் அவை கிடைப்பதில்லை. மிகச் சரியான வழிகாட்டியின் பயிற்சியில் தன்னை இணைத்து சமுத்திரத்தில் மூழ்கும் போது தான் விலை மதிக்க முடியாத முத்து, வைடூரியங்களை நாம் அடைய முடியும்.

அதைபோலத்தான் இந்த ஆன்மீகக் கடலில் இறைநேசம், இறை நெருக்கம் என்னும் புதையல்களை அடைவதற்கு தகுதியுடைய காமிலான ஷேஃகுடைய வழிகாட்டலில் நாம் திக்ர் பயிற்சியை செய்யும் போது விலை மதிப்பற்ற இறை நேசம் நமக்கு கிடைக்கிறது. “அல்லாஹ்” நம் அனைவருக்கும் இந்தப் பாக்கியத்தைத் தந்தருள்வானாக. ஆமின்!

## காமிலான ஷேஃகின் அவசியம்

இறைநேசப் படித்தரங்களைக் கடக்க வேண்டுமென்றால் ஓர் காமிலான ஷேஃகின் தொடர்பு அவசியமாகும். அவர்



தானும் உயர் நிலைப்படித்தரங்களை கடந்து, தன் மாணவர்களுக்கும் பயிற்சி அளித்து, தான் இறைநேசப்படித்தரங்களைக் கடந்தது போன்று. தன் மாணவர்களையும் படித்தரங்களைக் கடக்க வைப்பவராக இருக்க வேண்டும்.

ஆகவே இறை நெருக்கத்தைப் பெற விரும்பும் ஒவ்வொரு மாணவரும் “அல்லாஹ்”வின் நெருக்கத்தின் பால் அழைத்துச் செல்லும் காமிலான ஷேஃகை தேடி கண்டு பிடிக்க வேண்டும். ஓர் வழிகாட்டி (ஷேஃக்) இறந்து விட்டால் இன்னொரு புதிய பைஅத் தேவையா? என பொது மக்கள் கேட்கிறார்கள்.

இதற்கு ஷேஃக் “அல்லாஹ்”யார்ஃகான் (ரஹ்) குறிப்பிடுகிறார்கள் அவர்கள் அறிந்து கொள்ளட்டும், பைஅத் என்பது நாம் அடைய வேண்டிய இலக்கு அல்ல, ஆனால் அது அல்லாஹ்வின் திருப்தியை அடைய உள்ள காரணி மட்டுமே. ஓர் காமிலான ஷேஃகின் கையைப் பற்றி அவரிடமிருந்து வழிகாட்டும் நெறி முறைகளை பரிபூரண ஈடுபாட்டுடன் கேட்டுப் பெற்று அமல் செய்தால் தான் “அல்லாஹ்”வின் திருப்தியை முழுமையாக அடைய முடியும்.

ஆரம்ப வழிகாட்டியின் மரணத்திற்கு பின் புதிய வழிகாட்டியை பெற்றுக்கொள்ளாவிட்டால் இறை நெருக்கத்தைப் பெற வேண்டும் என்ற உங்கள் அனைத்து அபிலாஷைகளும் வீணாவதற்கு அது காரணமாக அமைத்து விடும்.

இதிலிருந்து நாம் விளங்கிக் கொள்வது என்னவென்றால் உங்கள் நோக்கம் அல்லாஹ்வின்



திருப்தியைப் பெறுவதை விட்டும் ஷேஃக்மார்களை போற்றுவதும், துதிப்பதுமாக ஆகிவிடுகிறது. இதற்கு ஓர் வரலாற்று உண்மை நமக்கு சான்றாக இருக்கிறது. அது என்னவென்றால் நபி சல்லல்லாஹூ அலைஹி வசல்லம் அவர்கள் மறைவுக்கு பின்னர் நான்கு நேர்வழிப்பெற்ற ஃகலீஃபாக்களிடம் ஒருவர் பின் ஒருவராக மக்கள் பைஅத் ஆனார்கள். இதுவே நமக்கு ஆதாரப் பூர்வமான முன்மாதிரியாக இருக்கிறது. (நூல் : “தலாயிலுஸ் சுலூக்”)

## இந்த சில்சிலாவின் மேன்மை

1. மற்ற சில்சிலாக்களில் கடைசியாகக் கொடுக்கப்படும் ஃகல்பி திக்ர் இங்கு ஆரம்பப்பாடமாக நபி சல்லல்லாஹூ அலைஹி வசல்லம் அவர்களின் உத்தரவின் பேரில் கொடுக்கப்படுகிறது.
2. ஃகல்பிதிக்ரின் பரக்கத்தால் விரைவிலேயே இறைநேசப்படித்தரங்கள் கிடைக்கப் பெற்று நபி சல்லல்லாஹூ அலைஹி வசல்லம் அவர்களிடம் ரூஹானி பைஅத் செய்து வைக்கப்படுகிறது.
3. உவைசுல் கர்னி (ரஹ்) அவர்கள் நபிசல்லல்லாஹூ அலைஹி வசல்லம் அவர்களை சந்திக்காமலே அவர்கள் ஆன்மாவிலிருந்து பயன் பெற்றார்கள். அதேப்போல் நபிசல்லல்லாஹூ அவைஹி வசல்லம் அவர்களை நேரடியாகச் சந்திக்காமலே ஆன்மீக ரீதியாக அவர்களிடமிருந்து இந்த சில்சிலாவில் பலன் பெற முடியும். அதனால் இந்த சில்சிலா உவைசுல் கர்னி (ரஹ்) அவர்களைப் போன்று ஆன்மீகப் பலன் பெறுவதால்

நக்ஷ்பந்தியா அவைசியா (உவைசி) என்று அழைக்கப் படுகிறது.

4. இந்த சில் சிலாவில் உள்ள அனைத்து மாணவர் களுக்கும் தாங்கள் கற்ற இந்தக் ஃகல்பி திக்ரை மற்றவர்களுக்கும் கற்றுக்கொடுக்க அனுமதி உண்டு.

5. முறையாக பயிற்சி செய்பவர்கள் ஷேஃகின் தொடர்பால் இறைநேசப் படித்தரங்களை அடைந்து கொள்ளலாம்.

6. படித்தரங்களை அடைந்தவர்கள் தாங்கள் எந்த மஃகாமில் இருக்கிறோம் என்பதை நன்கு உணர்ந்து கொள்ளலாம்.

## ஞானப்படித்தரங்களை அடையும் முறை :

1. கடமையான சுன்னத்தான தொழுகையுடன் தஹஜ்ஜுத், நபில் தொழுகைகளை தொழுது வரவேண்டும்.

2. காலை 45 நிமிடங்கள், மாலை 45 நிமிடங்கள் ஃகல்பி திக்ர் பயிற்சி செய்து வரவேண்டும்.

3. குறைந்த பட்சம் 3 மாதங்கள் ஃகல்பி திக்ர் பயிற்சி செய்து முடித்தவுடன் ஷேஃகைச் சந்திக்க வேண்டும்.

4. ஷேஃக் அவர்கள் தினமும் காலை, மாலை அவைசியா மஜ்லிஸில் நடக்கும் பயிற்சியில் தங்களுடன் அமரவைத்து திக்ர் செய்வார்கள். முராக்கபாவுடைய நிலையில் மாணவரின் ரூஹை தன்னுடன் அழைத்துச்சென்று வலிமார்களின் முதல் படித்தரமான அஹதிய்யத்தில் அமரவைப்பார்கள் அன்று முதல் இறைநேசர்களுடன் ஆகிவிடுகிறார்.



அதற்கு பின்னர் அவர்கள் எங்கு திக்ர் செய்தாலும் முராக்கபாவில் அஹதிய்யத் என்று சொல்லும் போது அவருடைய ரூஹ் ஏழு வானங்களை ஒரு நொடியில் கடந்து அஹதிய்யத் என்ற மஃகாமை அடைந்து விடும்.

திக்ர் செய்பவருக்கு கஷ்ஃபு என்ற அகக்கண்பார்வை இருந்தால் அந்த மஃகாமையும் அங்குள்ளவைகளையும் நேரடியாக கண்டு அந்த இன்பத்தில் திளைத்து இருப்பார்.

கஷ்ஃபு என்ற பார்வை இல்லாதவர்கள் கஷ்ஃபு பார்வை பெற்ற மாணவர்களின் மூலம் தங்களது படித்தரங்களின் நிலைமைகளை அறிந்து கொள்ளலாம்.

இந்த ஃகல்பி திக்ர் செய்யும் சிலருக்கு அல்லாஹுத் தஆலா தனது கிருபையால் கஷ்ஃபு என்னும் அகக்கண்களை திறந்து தாங்கள் சத்தியத்தில் தான் இருக்கிறோம் என்பதை வெளிப்படுத்துகிறான். **(அல்ஹம்துலில்லாஹ்...)**

## படித்தரங்களும் அதில் ஓத வேண்டியவைகளும்

ஃகல்பி திக்ர் பயிற்சி செய்யும் போது, நாம் அடையும் ஆரம்பப்படித்தரங்களின் பெயர்களும், அதன் அமைப்புகளும், அந்தப் படித்தரங்கள் பெற்றவர்கள் முராக்கபாவில் ஓத வேண்டியவைகளும் அடுத்த பக்கத்தின் அட்டவணையில் தரப்பட்டுள்ளது.



## சில்சிலா நக்ஷ் பந்தியா அவைசியாவின்

### இறைநேசப் படித்தரங்களும் அதில் ஓத வேண்டிய வளீஃபாக்களும்.

| முராக்கபா | படித்தரங்களின் இடம் | ஓத வேண்டிய வளீஃபாக்கள் |
|---|---|---|
| **1.அஹதிய்யத்** இது அவ்லியாக் களின் முதல் படித்தரம் | 1. இந்தப் படித்தரம் ஏழு வானங்களையும் கடந்து 50 ஆயிரம் ஒளி வருடம் பயணத்திற்கு அப்பால் உள்ளது. 2. இந்தப் படித்தரத்தில் உள்ள மஸ்ஜிதுகள், மற்றும் உள்ளத் தோற்றங்கள் அனைத்தும் வெண்மையாக இருக்கும். | وَإِلَٰهُكُمْ إِلَٰهٌ وَاحِدٌ لَّا إِلَٰهَ إِلَّا هُوَ الرَّحْمَٰنُ الرَّحِيمُ |
| **2.மஇய்யத்** இது அவ்லியாக்களின் இரண்டாம் படித்தரம் | 1. அஹதிய்யத்திற்கு நேராக மேற்புறத்தில் அமைந்துள்ள அடுத்தப் படித்தரம் இது. 2. இந்தப் படித்தரத்தில் உள்ள மஸ்ஜிதுகளும், மற்றும் உள்ளத் தோற்றங்கள் அனைத்தும் பச்சை நிறமாக இருக்கும். | وَهُوَ مَعَكُمْ أَيْنَ مَا كُنتُمْ அல்லாஹு ஹாளிரீ, அல்லாஹு நாளிரீ, அல்லாஹுமஈ |
| **3.அக்ரபிய்யத்** இது அவ்லியாக்களின் மூன்றாம் படித்தரம் | 1. மஇய்யத்திற்கு நேராக மேற்புரத்தில் இது அமைந்துள்ளது. 2. இந்தப் படித்தரத்தில் உள்ள மஸ்ஜிதுகள், மற்றும் உள்ளத் தோற்றங்கள் அனைத்தும் பொன் நிறமாக இருக்கும் | وَنَحْنُ أَقْرَبُ إِلَيْهِ مِنْ حَبْلِ الْوَرِيدِ |
| **4. தாயிரா முஹப்பத்** இது அவ்லியாக்களின் நான்காம் படித்தரம் | "அல்லாஹ்"வின் அன்பின் வட்டங்கள் ஒன்றன் பின் ஒன்றாக அமைந்து இருப்பதைக் காண்கிறோம். | தாயிரா முஹப்பத் தாயிரா முஹப்பத் ஒன்றாவது தாயிரா முஹப்பத் இரண்டாவது தாயிரா முஹப்பத் மூன்றாவது / யுஹிப்புஹும் வயுஹிப்பூனஹு |



| முராக்கபா | படித்தரங்களின் இடம் | ஓத வேண்டிய வளீஃபாக்கள் |
|---|---|---|
| **5. இஸ்மு ளாஹிர் வல்பாத்தின்** இது அவ்லியாக்களின் ஐந்தாம் படித்தரம் | இந்தப் படித்தரத்தில் "அல்லாஹ்"வுடைய அன்பின் வட்டங்கள் ஒன்றன் பின் ஒன்றாக ரூஹினுல் சென்று கலந்து, ரூஹின் முந்திய நிலையை விட மேலும் பலமடைவதைக் காண்கிறோம். | هُوَ الْأَوَّلُ وَالْآخِرُ وَالظَّاهِرُ وَالْبَاطِنُ وَهُوَ بِكُلِّ شَيْءٍ عَلِيمٌ |
| **6. சேரெ கஃபா** இது அவ்லியாக்களின் ஆறாம் படித்தரம் | இதில் நமது ரூஹ் கஃபாவின் முல்தஜிம் கதவின் முன்பாக வலது கன்னத்தை கஃபாவின் திரையில் ஒன்றியவாறு "அல்லாஹ்" விடம் மனதொன்றி துஆச் செய்கின்றது. | ஹஜருல் அஸ்வத் கல்லை முத்தமிட்டப்படி கஃபாவை தவாஃப் செய்கிறது. |
| **தவாஃப்** | இதில் நமது ரூஹ் கஃபாவை தவாஃப் செய்கின்றது. | **லப்பைக் அல்லாஹூம்ம லப்பைக் லப்பைக் லாஷரீக்க லக்க லப்பைக்** |
| **சேரெ சலாத்** | இதில் நமது ரூஹ் கஃபாவில் தொழுகையை நிறைவேற்றுசிறது. | மஃகாமே இப்ராஹிமின் வலது பக்கம் தவாஃபே நஃபில் இரண்டு ரக்கஅத்து தொழுவது |
| **சேரெ குர்ஆன்** | இதில் நமது ரூஹ் குர்ஆன் ஓதுகிறது. | குர்ஆனின் மூன்று ஆயத்து ஓதுதல் |
| **7.ரவ்ளாயே அத்ஹர்** இது அவ்லியாக்களின் ஏழாம் படித்தரம் | இந்தப் படித்தரத்தில் நபி (சல்) அவர்களின் ரவ்ளாவில் அதபோடு நின்று சென்று சலாம் சொல்லுதல். | "அஸ்ஸலாமு அலைக்க யா ரஸூலல்லாஹ்" "அஸ்ஸலாமு அலைக்க யா ஹபீபல்லாஹ்" |
| **மஸ்ஜிதுன் நபவீ ஷரீஃப்** | நபி (சல்) அவர்களின் மஸ்ஜிதுன் நபவிய்யில் அமர்ந்து இருக்கும் வலிமார்களின் சஃபில் நாமும் அமர்ந்த வண்ணம் சிறிது நேரம் சலவாத்து ஓதுவது | அல்லாஹும்ம சல்லி அலா முஹம்மதினின் நபிய்யில் உம்மிய்யி வஆலிஹி வசஹ்பிஹி வபாரிக் வசல்லிம் |

| முராக்கபா | படித்தரங்களின் இடம் | ஓத வேண்டிய வளீஃபாக்கள் |
|---|---|---|
| **8.உபூதிய்யத்** இது அவ்லியாக்களின் எட்டாம் படித்தரம் | இந்த மஃகாமில் மரங்களும், நட்சத்திரங்களும் அல்லாஹ்விற்கு சுஜூது செய்வது காணப்படுகிறது. மேலும் இந்த மஃகாமை அடைந்தவர்களும் சுஜூது செய்வதைக் காணலாம். | وَالنَّجْمُ وَالشَّجَرُ يَسْجُدَانِ நட்சத்திரங்களும், மரங்களும், அல்லாஹ்வை சுஜூது செய்கின்றன (குர்ஆன் 55:6) |
| **9.ஃபனா ஃபில்லாஹ்** இது அவ்லியாக்களின் ஒன்பதாம் படித்தரம் | வானம், பூமி அழிவதை இந்த மஃகாமில் காணப்படுகிறது. | كُلُّ مَنْ عَلَيْهَا فَانٍ இம்மண்ணுலகில் உள்ள யாவும் அழிந்து போகக் கூடியதாகும். (குர்ஆன் 55 : 26) |
| **10.பகாஃ பில்லாஹ்** இது அவ்லியாக்களின் பத்தாம் படித்தரம் | இந்த மஃகாமில் அல்லாஹ்வின் தஜல்லியாத் மிகவும் பிரகாசமாக காணப்படுகிறது | وَيَبْقَىٰ وَجْهُ رَبِّكَ ذُو الْجَلَالِ وَالْإِكْرَامِ வல்லமையும், கண்ணியமும் உடைய உம் இறைவனின் முகமே நிலைத்திருக்கும். (குர்அன் 55 : 26) |
| **11. ஃபனா ஃபிர் ரசூல்** இது அவ்லியாக்களின் பதினொன்றாம் படித்தரம் | இந்த மஃகாமை அடைந்தவர்களுக்கு ரசூல் (சல்) அவர்களிடம் ரூஹானி பைஅத் முராக்கபாவில் செய்விக்கப்படும். அதனுடன் அபூபக்கர் சித்தீக் (ரலி) அவர்களிடமும், அலி (ரலி) அவர்களிடம் முசாபஹா செய்யும் பாக்கியமும் கிடைக்கும். | அல்லாஹும்ம சல்லி அலா முஹம்மதினின் நபிய்யில் உம்மிய்யி வஆலிஹி வசஹ்பிஹி வபாரிக் வசல்லிம் |



**படித்தரங்களுக்கு செல்லும் முறை :**

உதாரணமாக அஹதிய்யத் படித்தரம் பெற்றவர் முராக்கபாவில் அஹதிய்யத் என்று மனதிற்குள்ளாக கூறி 2 நிமிடம் அமைதியாக கண்மூடிய நிலையில் இருக்க வேண்டும்.

அப்பொழுது அவரின் ரூஹ் ஒரு நொடிப் பொழுதிற்குள் ஏழுவானம் தாண்டி, அஹதிய்யத் மஃகாமை அடைந்து கொள்ளும்.

அதேபோல் அடுத்தடுத்தப் படித்தரங்களைப் பெற்றவர்களை அந்தந்த மஃகாமின் பெயரைக் கூறியதும் ரூஹ் அந்தந்த மஃகாமை அடையும். ஒவ்வொரு மஃகாமிலும் குறைந்த பட்சம் 1 நிமிடம் இருந்து விட்டு முராக்கபாவை முடித்துக்கொள்ள வேண்டும்.

அகக்கண் பார்வை திறந்தவர்கள் தங்கள் ரூஹ் ஒவ்வொரு மஃகாம் செல்வதையும் கண்டுகொள்வார்கள். கஷ்ஃப் என்ற அகக்கண் பார்வை இல்லாதவர்கள் அவர்கள் பார்க்காவிட்டாலும் ரூஹ் அவர்களுடைய மஃகாமுக்கு சென்று திரும்பிவரும். இது “அல்லாஹ்”வின் மாபெரும் கிருபையாகும்.

**உயர்நிலைப் படித்தரங்களின் வரிசை முறை :**

ஆரம்பப் படித்தரங்கள் ஷேஃக் அவர்களால் “அல்லாஹ்”வின் உதவியைக் கொண்டு கடக்க வைக்கப்படுகிறது. உயர்நிலைப் படித்தரங்கள் பெற நாமும் பயிற்சி செய்து, மக்களுக்கும் இதனை எடுத்துரைத்து மக்கள் மத்தியில் இந்த திக்ரின் அழைப்புப் பணியை செய்ய வேண்டும். இந்த திக்ர் என்னும் ஆன்மீக பயிற்சி மூலம் மக்கள் வாழ்க்கையின் நெறிமுறைகளும், நற்குணமும் வளர்கிறது. இவ்வாறு நாம் செய்யும் பொழுது நபி (சல்) அவர்கள் மூலமாக உயர்நிலைப்படித்தரங்கள் கடக்க வைக்கப்படுகிறது.



**உயர்நிலை படித்தரங்களின் வரிசை முறை :**






**உலக முழுவதும் இன்டர்நெட் திக்ர்**

சில்சிலா நக்ஷ்பந்தியா அவைசியாவின் அகில உலகத்தின் தலைவராக ஷேஃக் அப்துல் கதீர் அவான் (தாமத் பரக்காத்துஹு) நியமிக்கப்பட்டுள்ளார்கள். அல்லாஹ்வின் கிருபையால் அவர்களுக்கு உலகமுழுவதும் மாணவர்கள் இருக்கிறார்கள்.

மாணவர்கள் அனைவரும் ஷேஃக் அவர்களுடன் சேர்ந்து திக்ர் செய்யும் விதமாக இன்டர்நெட்டின் மூலமாக குறிப்பிட்ட நேரத்தில் காலையும், மாலையும், ஷேஃக் அவர்கள் திக்ர் செய்கிறார்கள். இதில் ஷேஃக் அவர்களின் சப்தம் மட்டும் கேட்கும், ஷேஃக் அவர்களின் உருவம் தெரியாது. நம்முடைய இடத்தில் இருந்து கொண்டே ஷேஃகின் தொடர்பில் இன்டர்நெட்டின் மூலமாக திக்ர் செய்து முழுமையான பரக்கத்துகள் நாம் பெற்றுக்கொள்ள முடியும்.

**இண்டர்நெட் உபயோகிக்கும் முறை**

www.paltalk.com சென்று இந்த இணைய தளத்தில் உங்கள் பெயரில் அக்கவுண்ட் ஆரம்பித்து உங்கள் Nick Name மும், password டும் பதிவு செய்யவும்.

இந்த இணைய தளத்தில் இருந்து அதற்கு ஏற்ற Software ஐ Download செய்யவும். பின்னர் இந்த Software ஐ உங்கள் கம்ப்யூட்டரில் Install செய்யவும். அந்த paltalk Software Icon ஐ Double click செய்யவும்.

அதில் உங்கள் Nick Name மையும், Password டையும் கொடுத்து இந்நிகழ்ச்சியில் கலந்து கொள்ளலாம்.

**Groups** உள்ள **Window** திறந்து அதில் **Groups Scroll** செய்து கொண்டே **Religion & Spiritualilty** யை இரண்டு கிளிக் செய்து, அதன் பக்கத்தில் வரும் வரிசையில் **Islam** தேர்வு செய்யவும்.

பின்னர் Islam என்ற இடத்தில் இரண்டு Click செய்யவும். அதில் புதிதாக திறக்கும் Window வில் Our Sheikh இரண்டு Click செய்யவும். பின்னர் Our Sheikh Room ல் நுழைந்தால் அங்கு திக்ர் செய்யும் பாக்கியமும், ஷேஃகின் பயான் கேட்கும் பாக்கியமும் கிடைக்கும்.

குறிப்பு : **Our Sheikh Room** திக்ர் செய்யும் நேரம் மட்டும் திறந்து இருக்கும். மற்ற நேரங்களில் மூடியே இருக்கும், Room மூடி இருக்கும் போது Islam என்ற இடத்தில் Our Sheikh கிடைக்காது. Room திறக்கும் நேரம் : காலை 5.00 மணி – இரவு 9.30 மணி இது தட்ப வெட்ப சூழ்நிலைகளுக்கு தகுந்தாற்போல் மாறும். www.oursheikh.com எந்த நேரமும் visit செய்து பார்க்கலாம். அதில் ஷேஃகுடைய பயானும், அவர்களைப் பற்றிய முழு விபரங்களும் அறியலாம். மேலும் **www.owaisiah.com** என்பதும் நமது வெப்சைட் ஆகும்.



## அன்றாட அமல்களின் தொகுப்பு

1. தஹஜ்ஜுத் 8 ரக்கஅத்துகள்
2. ஃகல்பிதிக்ர் (ஏழு லத்தீஃபாக்களில் பயிற்சியும், முராக்கபாவும்)
3. ஃபஜ்ர் தொழுகை சுன்னத்துடன்
4. குர்ஆன் ஓதுதல் மேலும் தஸ்பீஹாத்துகள்
5. இஷ்ராக் தொழுகை 4 ரக்கஅத்துகள் (சூரியன் உதயமாகி 20 நிமிடங்களுக்குப் பின்)
6. ளுஹாத் தொழுகை 8 ரக்கஅத்துகள் (காலை 8.30 முதல் 11.45 வரை)
7. ளுஹர், அசர், மஃரிப் ஃபர்லுடன் சுன்னத், நஃபில் தொழுகைகள்
8. மஃரிபுக்குப் பின் அவ்வாபீன் தொழுகை 6 ரக்அத்துகள்
9. மேலும் ஃகல்பிதிக்ர் (ஏழு லத்தீஃபாக்களில் பயிற்சியும், முராக்கபாவும்)
10. இஷா ஃபர்ளு, சுன்னத், நஃபில், வாஜிபுதொழுகைகள்
11. இரவு உறங்கும் பொழுது வலது பக்கமாக கை வைத்து படுத்து இயல்பான மூச்சில் "அல்லாஹ்" என்று இதயத்தில் உள்ளிழுத்து வெளிவிடும் மூச்சில் ஹு என்று இதயத்தை தாக்குவது போல் விட வேண்டும். மேலும் "அல்லாஹ்"வின் நினைவிலேயே மூழ்கி இருக்க வேண்டும்.
12. படித்தரங்கள் பெற்றவர்கள் இரவு உறங்கும் பொழுது திக்ருடன் அவர்களின் மஃகாமை முராக்கபா செய்து உறங்க வேண்டும்.
13. வசதியான நேரங்களில் ஓத வேண்டிய தஸ்பீஹாத்துகள்

1. லாஇலாஹ இல்லல்லாஹ் – 300 தடவை ஓதி ஒவ்வொரு 100 முடிவிலும் முஹம்மதுர் ரசூலுல்லாஹ் (சல்) ஒரு தடவை ஓதுதல்.



2. லாஹவ்ல வலாகுவ்வத்த இல்லாபில்லாஹ் - 300 தடவை ஓதி ஒவ்வொரு 100 முடிவிலும் அலிய்யுல் அளீம் ஓதுதல்.

3. அஸ்தஃக்பிருல்லாஹ ரப்பி மின் குல்லி தன்பின் வஅத்தூபு இலைஹி – 300 தடவையும் ஓதி வர வேண்டும்.

4. அல்லாஹும்ம சல்லி அலா முஹம்மதினின் நபிய்யில் உம்மிய்யி வஆலிஹி வசஹ்பிஹி வபாரிக் வசல்லிம் – என்ற சலவாத்தை குறைந்த பட்சம் 300 தடைவையும் மற்ற நேரங்களில் அதிமாகவும் ஓத வேண்டும்.

14. வெள்ளிக்கிழமை தோறும் தஸ்பீஹ் தொழுகை 4 ரக்கஅத்துகள் தொழுவது சிறப்பாகும்.

15. பிறை 13,14,15 மேலும் திங்கள், வியாழன் நோன்பு பிடிப்பது சுன்னத்தாகும். நபி (சல்) இந்த தினங்களில் நோன்பு பிடிப்பார்கள்.

## இஜ்திமா அழைப்பு...

"அல்லாஹ்"வின் கிருபையால் ஒவ்வொரு வருடமும் ஜனவரி மாதம் மூன்று நாட்கள் சென்னை அவைசியா மஜ்லிஸ் சார்பில் ஆன்மீக இஜ்திமா வழக்கமாக நடைபெறுகிறது.

இந்த மூன்று நாட்களுக்கும் தங்குவதற்கும், உணவிற்கும் மஜ்லிஸ் சார்பாக ஏற்பாடு செய்யப்படுகிறது.

புதிதாக திக்ரை தெரிந்து கொள்ள விரும்புபவர்களும், தொடர்ந்து திக்ர் செய்பவர்களும் இதில் கலந்து கொண்டு பலன் பெறலாம்.

தொடர்ந்து பயிற்சி செய்யும் ஆண், பெண் இரு பாலருக்கும் அடுத்தடுத்தப் படித்தரங்களை பெற்றுக் கொள்ளலாம்.

கலந்து கொள்ள விரும்புபவர்கள் முன்னரே சென்னை



அவைசியா மஜ்லிசுக்கு தொலைபேசியின் மூலம் தொடர்பு கொண்டு வருவததை உறுதி செய்ய வேண்டும்.

## ஆரம்பப் பயிற்சி செய்யும் முறை

ஃகிப்லா பக்கம் கண்மூடி அமர்ந்து கொள்ள வேண்டும்

"அல்லாஹ்" என்று இதயத்தின் ஆழத்தில் செல்வது போன்று நினைத்து மூச்சை உள் இழுக்க வேண்டும்

மூச்சை வெளிவிடும் போது ஹு என்று நினைத்து இதயத்தின் மேல் பாகத்தில் அடிப்பது போல் மூச்சை வெளியே விட வேண்டும்.

மூச்சை உள் இழுக்கும் போது தலையை மேலே உயர்த்தியும், மூச்சை வெளிவிடும் போது தலையை கீழே தாழ்த்தியும், தலையை மேலும், கீழும் அசைத்து திக்ர் செய்ய வேண்டும். இது உடம்பு தளர்வடையாமல் இருக்க காரணமாக அமையும்.

இதனை காலை, மாலை 20 நிமிடங்கள் செய்ய வேண்டும்.

திக்ர் முடிந்ததும் மூச்சின் தன்மை "அல்லாஹு" என்ற சொல் இதயத்திற்குள் சென்று வருவதை அமைதியாக கண்மூடி கவனித்த வண்ணம் 3 நிமிடங்கள் இருக்க வேண்டும்.

பின்னர் துஆ ஓதி நமது தேவைகளை "அல்லாஹ்"விடம் கேட்டு திக்ரை நிறைவு செய்ய வேண்டும்

## நீங்களும் இறைநேசர் ஆகலாம்...

இந்த புத்தகத்தில் இரத்தின சுருக்கமாக ஆன்மீக விஷயங்கள் தெளிவுப் படுத்தப்பட்டுள்ளன. மேலும் விளக்கம் பெற **இஸ்லாத்தில் ஆன்மீகமும் அதன் அடிப்படை குணங்களும்** என்ற புத்தகத்தைப் படிக்கவும்.

# ஷேஃகிடம் (ஞான குரு) நடந்து கொள்ள வேண்டிய அதபு - ஒழுங்கு முறை

## மதிப்பு நிலை

தசவ்வுஃப் என்னும் மெஞ்ஞான வழி முழுவதும் ஒழுக்க நெறியாகும். எல்லா நேரத்திலும், எல்லா நிலையிலும், எல்லா இடத்திலும் அவ்வொழுக்க நெறிப் பேணப்பட வேண்டும். இவ்வாறு பேணியவர் மக்களிடையே கண்ணியத்தைப் பெறுவர். இதைப் புறக்கணிப்பவர் "அல்லாஹ்"விடமிருந்து தூரமாகிவிட்டார்.

(அவாரிஃபுல் மஆரிஃப் இரண்டாம் பாகம், பக்கம் 16)

1. உங்கள் முழு கவனமும் ஷேஃகின்பால் இருக்க வேண்டும். சிந்தனைகளும், எண்ணங்களும் இங்கும் அங்கும் அலை பாய்வதைத் தவிர்க்க வேண்டும்.
2. நன்னெறியின் உயர் கட்டங்களை அடையும் சீடர் தன்னுடைய இறுதிப் படித்தரத்தில் கவனத்தை செலுத்தி அமர்ந்திருக்க வேண்டும்; ஷேஃகின் இதயத்திலிருந்து ஒளி பலன் அவருக்குக் கிடைப்பதை தலைத்தாழ்த்தி பெறவேண்டும்.
3. தனிப்பட்ட ஆத்மீக நலன்களைப் பெற நாடும் சீடர்கள் அதை கவனத்தில் கொண்டு அமர வேண்டும். எனினும் ஷேஃகுடன் தம் இதயத் தொடர்பினை உறுதிப்படுத்தும் முயற்சியிலும் ஈடுபட்டு இருக்க வேண்டும்.
4. கொள்கை கோட்பாட்டுக்கு எதிராக ஷேஃகின் ஆணை இல்லையென்றால் காரணம் கேட்காமலேயே சீடர் அதை



ஏற்றுச் செயல்பட வேண்டும். சில நேரங்களில் சீடரின் அறிவுக்கு எட்டாத காரணம் ஆசானின் சிந்தனையில் இருக்கலாம்.

5. ஆசானுடைய மடலின் மேன்மை நபிகள் நாயகம் (சல்) அவர்கள் ரோமாபுரியின் ஹிர்குலுக்குக் (Heraclius) கடிதம் எழுதினார்கள். அவர் கிருத்துவராக இருந்தாலும், இறைதூதர்களின் சிறப்பை அறிந்தவர். எனவே அவர் அந்த மடலைப் பாதுகாத்து. அதற்கு மதிப்புத் தருமாறு மற்றவர்களுக்கும் ஆணையிட்டார். அதனால் அவருடைய ஆட்சிக்குத் தீங்கு நேரவில்லை. எனவே அஹ்லுல்லாஹ் என்னும் வலிமார்கள் இதை உதாரணமாகக் காட்டி ஷேஃகின் கடிதத்திற்குத் தரும் பாதுகாப்பும் மதிப்பும் சீடரின் ஆன்மிக நிலையைப் பாதுகாக்கும் என்று பொருள் கொள்கிறார்கள்.
6. ஷேஃகை சந்திப்பதற்காக வெளியிலிருந்து வரும் சீடர், இந்தத் திருக்குர்ஆன் வாசகத்தையும், அதன்படி நபிமணி (சல்) அவர்களின் தோழர்கள் மேற்கொண்ட முறையையும் பின்பற்ற வேண்டும். "நிச்சயமாக அவர்கள் நீர் அவர்களிடம் வரும் வரை பொறுமையாக இருந்திருந்தால் அவர்களுக்கு அது நன்மையாக இருந்திருக்கும். ஆயினும் "அல்லாஹ்" மிக மன்னிக்கிறவன், கிருபையாளன்" (49 : 5)

(பனூ அன்பர் கோத்திரத்தார் அவசரப்பட்டுப் பொறுமையிழந்து நடந்து கொண்டமையால் அவர்களுக்கு ஏற்பட்ட இழப்பு ஹுஜுராத் ஐந்தாம் திருவசனத்தின் விளக்கவுரைகளில் கூறப்படுகிறது.



அதாவது ஷேஃகு வெளியே வரும்வரை காத்திருக்க வேண்டும்; மிகவும் அவசியமான விஷயம் என்றால் உள்ளே தகவல் சொல்லியனுப்ப வேண்டும். குரலெழுப்பவோ அவசரப்படவோ கூடாது.

7. ஷேஃகுடன் சீடருக்குள்ள இதயத் தொடர்பில் சிறிதளவு வேற்றுமை வந்தாலும், பலனடைவதில் தடைகள் ஏற்பட்டுவிடும்.
8. ஷேஃகுடன் மாணவரின் திசையில் கவனம் செலுத்தும் போது இறைவனின் அருள் ஷேஃகுக்குக் கிட்டுகிறது; இறைவனின் விருப்பமும் ஷேஃகின் மூலம் சீடருக்குக் கிடைக்கின்றன. சீடர் எத்தகைய உயர் நிலைகளை அடைந்து விட்டாலும், அவருடைய கடிவாளம் ஷேஃகின் கையில் தான் இருக்கும்.
9. சீடரின் மனதில் ஷேஃகின் பால் திடநம்பிக்கை இருக்க வேண்டும். மேலும் அந்தப் பற்றுறுதியில் அவர் நிலையாக இருக்க வேண்டும். மெஞ்ஞான மொழிமரபில் இதனை "தவ்ஹீது மத்லப்" என்கிறார்கள்.
10. ஷேஃகுடன் தவறாக உடையாடல் கூடாது; எதையும் விவரமாக, வெளிப்படையாகச் சொல்ல வேண்டும்.
11. ஷேஃகுடன் நம்பிக்கைக் கேடான முறையில் நடக்கலாகாது; ஷேஃகின் பேச்சுகள், இரகசியங்கள் எல்லாவற்றையும் பாதுகாக்க வேண்டும்.
12. தனக்காக எதை மிகவும் விரும்புகிறாரோ, ஷேஃகுக்காகவும் அதையே விரும்பிட வேண்டும்.
13. ஷேஃகின் பேச்சைக் கவனமாகக் கேட்டு, அதன்படி நடக்கவேண்டும். அவையில் ஷேஃகின் பேச்சைக்



கேட்கும் எண்ணத்துடன் போக வேண்டும்; தன் பேச்சை அங்கு பேச, பிறர் அதைக் கேட்க வேண்டுமென்ற ஆர்வத்துடன் போகக் கூடாது.

14. தனது ஆன்மீக வளர்ச்சிக்கு உடனடியாக வழிவகை செய்ய வேண்டுமென்று ஷேஃகைக் கேட்கவோ, வற்புறுத்தவோ கூடாது.
15. இதுவரை கடந்து வந்த படித்தரங்களை பாதுகாத்து இறைவனுக்கு நன்றி செலுத்துவது சீடனின் கடமையாகும். இறைவன் தனது வாக்குறுதிப்படி மேலும், மேலும் அவனுக்கு உயர்வுகள் அளிப்பான்.
16. ஷேஃகின் சமூகத்தில் உட்காரும்போது அவரின் முகத்தை வெறித்துப் பார்க்கக் கூடாது. தனது இதயத்தின் பால் முழு கவனத்தை செலுத்தி (தியானத்தில்) திக்ரில் ஈடுபட்டும் மேலும் தான் கடந்து வந்த படித்தரங்களிலும் கவனம் செலுத்த வேண்டும்.
17. ஷேஃகிடம் ஏதாவது கேட்டால், மாணாக்கராகத் தெரிந்து கொள்ளும் முறையில் கேட்க வேண்டும். மறுப்புத் தெரிவிப்பதற்காகவோ, விவாதம் செய்வதற்காகவோ எந்த வினாவையும் எழுப்பலாகாது. ஏனெனில் ஷேஃகை இழிவாக மதிப்பது சீடர் பலன் பெறாவண்ணம் தடைகளை ஏற்படுத்தும்.
18. நடக்கும்போது ஷேஃகுக்கு முன்னால் போகக் கூடாது.
19. ஷேஃகு இல்லாத சமயத்தில் அவரால் நியமிக்கப்பட்ட அவருடைய பிரதிநிதிக்கும், ஷேஃகுக்குரிய மதிப்பை அளிக்க வேண்டும்.
20. ஷேஃகிடம் வழக்காடியாகப் போகக் கூடாது. அவருக்கு முன்னால் தன் திறமைகளை வெளிப்படுத்த முயல்வதையும் தவிர்க்க வேண்டும்.

## இந்திய ஃகலீஃபாவின் அழைப்பு

இந்தியாவின் ஃகலீஃபாவாகிய ஷேஃக் மவ்லானா முஹம்மது மாலிக்அவர்கள் அனைத்து மக்களையும் இந்த இதய (ரூஹின்) தூய்மையை பெற்றுத்தரும் ஆன்மீகப் பாதையில் அழைக்கிறார்தள்.

எவர் இந்த ஃகல்பிதிக்ர் பயிற்சியை முறையாகக் கற்று 10 நாட்கள் காலை, மாலை தொடர்ந்து 45 நிமிடங்கள் செய்து வருகிறார்களோ, "இன்ஷா அல்லாஹ்" இறைவன் அருளால் தொழுகையில் அவர் மனம் அங்கும், இங்கும் ஓடும் ஓட்டம் நின்று தொழுகையில் மன ஓர்மை உண்டாவதைக் காணலாம்.

தஹஜ்ஜுத் தொழுகையுடன் 3 மாதங்கள் ஃகல்பிதிக்ர் பயிற்சி செய்பவர்கள் ஆரம்ப இறைநேசப் படித்தரங்களை அடைந்து கொள்ளலாம். தொடர்ந்து அடுத்த படித்தரங்களைப் பெற்று முன்னேற்றம் பெறலாம்.

நமது வாழ்க்கைப் பயணம் என்பது ஒரு நாள் அல்லது சிறிது கூடுதலாக (சூரா : மூமினூன் : 23-112). இதற்காக மிகப் பெரிய போராட்டங்களை சந்திக்கிறோம். இறுதியில் தோல்வியடைந்தவர்களாக இவ்வுலகத்தை விட்டு வெளியேறுகிறோம். எவ்வளவு பெரிய கை சேதம்! இந்த குறுகிய வாழக்கையில் போராட்டங்களை எதிர் கொண்டது மட்டுமல்லாமல் அதில் வெற்றியடைந்தவர்கள் யார் என்றால் சூஃபியாக்கள் மட்டுமே. வாருங்கள் நாம் அனைவரும் இவ்வுலக மைதானத்தில் "அல்லாஹ்"வின் துணை கொண்டு ஷைத்தானை எதிர்த்து போராடுவோம். எல்லாம் வல்ல "அல்லாஹ்" அவனுடைய நினைவும் அமல்சாலிஹும் நமக்கு அளித்து வெற்றி அளிப்பான் என முழு நம்பிக்கை கொள்வோம்.



## உடனடியாக கவனிக்க வேண்டியவை

1. தன் பழைய வழிகேடுகளை எண்ணி, உண்மையான மனதுடன் கழிவிரக்கம் கொள்ளுங்கள். இனி எந்தப் பாவமும் செய்வதில்லை என்று உறுதிப்படுத்திக் கொள்ளுங்கள்.

2. மற்றவர்களை வெறுக்குமுன் தன்னிடமுள்ள தீய குணங்களை வெறுத்து அல்லாஹ்விடத்தில் நற்குணமுள்ள நேசனாக மாறுங்கள்.

3. கடமைகளை நிறைவேற்றுங்கள், திருக்குர் ஆனை தவறாமல் தினமும் ஓதிவாருங்கள்.

4. ஹராமான வழிகளில் வருமானத்தைத் தேடி அதைக் கொண்டு உண்ணாதீர்கள். பொய் பேசுவதைத் தவிர்த் திடுங்கள்.

5. தம்முடைய அலுவல்களைக் கருத்தில் கொண்டு, ஒரு குறிப்பிட்ட அளவில் தவறாமல் சலவாத்து ஓதி வாருங்கள். அதனால் நபிமணி (சல்) அவர்களின் பால் பேரன்பும், அன்னாரின் வழியைப் பின்பற்றும் ஆர்வமும் உறுதி பெறுகின்றன.

6. இறைவ னுடைய படைப்புகளின் உரிமைகள் மிகவும் முக்கியமானவை. அவற்றைப் பேணத் தவறாதீகள்.



7. எவ்வளவுதான் வெளிரங்க அமல்களை மேற்கொண்டாலும் "திக்ருல்லாஹ்" (இறைதியானம்) இல்லாமல் வாழ்வினில் எந்த ஆக்கபூர்வமான நல்ல மாறுதலையும் காண முடியாது.

8. "திக்ருல்லாஹ்" (இறைதியானம்) இதயத்தை மாற்றியமைத்து, அதைக் கீழ்த்தர உணர்வுகளிலிருந்தும், தீய செயல்களிலிருந்தும் விலக்கி, முழுமையான நல்வாழ்வின் பால் அதன் பயணத்தைத் தொடங்கி வைக்கிறது ஆதலால் ஃகல்பி திக்ர் காலையிலும் மாலையிலும் தவறாமல் செய்து வாருங்கள். எக்காரணத்தைக் கொண்டும் இப்பயிற்சிக்கு நேரம் இல்லை என்று சொல்லி மறுமையை வீணாக்கிக் கொள்ளாதீர்கள்.

9. "அல்லாஹ்"வின் பெயரைச் சொல்லி, அவனை நினைப்பதற்கான எண்ணமும் வாய்ப்பும் தந்தருளிய "அல்லாஹ்"வுக்கு நன்றி செலுத்துங்கள்.

10. குர்ஆனில் "அல்லாஹ்"வின் திக்ரைப் பற்றி எப்படி அதிகமாக உத்தரவுகள் உள்ளதோ அதை மக்களுக்கு அதிகமாக எத்தி வையுங்கள். இதனால் மக்களுக்கு "அல்லாஹ்"வின் தொடர்பு அதிகமாகி இறைவனுடைய நேசம் உறுதிப்படும்.



## நமது நூலகத்தில் கிடைக்கும் இதர நூல்கள்

شیخ المکرم حضرت مولانا اللہ یار خانؒ

| | | |
|---|---|---|
| 15.00 | تعارف (اردو) | -1 |
| 20.00 | تعارف (انگلش) | -2 |
| 250.00 | دلائل السلوک (اردو) | -3 |
| 250.00 | دلائل السلوک (انگلش) | -4 |
| 30.00 | حیات النبی ﷺ | -5 |
| 200.00 | حیات برزخیہ (اردو) | -6 |
| 40.00 | حیات برزخیہ (انگلش) | -7 |
| 80.00 | اسرار الحرمین | -8 |
| 25.00 | علم وعرفان (اردو) | -9 |
| 25.00 | علم وعرفان (انگلش) | -10 |
| 30.00 | عقائد وکمالات علمائے دیوبند | -11 |
| 35.00 | سیفِ اویسیہ | -12 |
| 40.00 | تفسیر آیات اربعہ | -13 |
| 200.00 | الدین خالص | -14 |
| 120.00 | ایمان بالقرآن | -15 |
| 200.00 | تحریر المسلمین عن کید الکاذبین | -16 |
| 40.00 | تحقیق حلال وحرام | -17 |
| 35.00 | شکست اعدائے حسینؓ | -18 |
| 20.00 | دامادِ علیؓ | -19 |
| 15.00 | بناتِ رسول ﷺ | -20 |
| 25.00 | الجمال والکمال | -21 |
| 600.00 | حیات طیبہ اول | -22 |
| 500.00 | حیات طیبہ دوم | -23 |

## حضرت امیر محمد اکرم اعوان مدظلہ العالی

| | | |
|---|---|---|
| 1- | غبار راہ اوّل | 150.00 |
| 2- | غبار راہِ دوّم | 100.00 |
| 3- | ارشاد السالکین اوّل | 40.00 |
| 4- | ارشاد السالکین دوّم | 25.00 |
| 5- | لطائف اور تزکیہ نفس | 15.00 |
| 6- | دیار حبیب میں چند روز | 20.00 |
| 7- | نور و بشر کی حقیقت | 15.00 |
| 8- | کنز الطالبین | 200.00 |
| 9- | راہی کرب و بلا | 20.00 |
| 10- | رموزِ دل | 60.00 |
| 11- | حضرت امیر معویہؓ | 35.00 |
| 12- | طریق نسبت اویسیہ | 250.00 |
| 13- | تعلیمات و برکات نبوت | 200.00 |
| 14- | خطباتِ امیر | 120.00 |
| 15- | کنوزِ دل | 250.00 |



## حضرت امیر محمد اکرم اعوان مدظلہ العالی (تفسیر قرآن)

| | | |
|---|---|---|
| 1- | اسرار التنزیل (اردو) چھ جلدوں میں (فی سیٹ) | 2300.00 |
| 2- | اسرار التنزیل (انگلش) پانچ جلدوں میں (فی سیٹ) | 2000.00 |
| 3- | اکرم التفاسیر (زیر طبع) جلد اول، دوم، سوم | |
| | (فی جلد) | 270.00 |
| | (جلد چہارم) | 370.00 |
| | (جلد پنجم) | 300.00 |
| | (جلد ششم) | 350.00 |
| | (جلد ہفتم) | 470.00 |

### ادارہ نقشبندیہ اویسیہ

| | | |
|---|---|---|
| 1- | ہشت روزہ کورس | 100.00 |
| 2- | سہ ہفتہ کورس | 150.00 |
| 3- | پنج ہفتہ کورس | 200.00 |
| 4- | پیشین گوئیاں | 15.00 |
| 5- | اسلام اور تہذیب جدید (اردو) | 120.00 |
| 6- | اسلام اور تہذیب جدید (انگلش) | 120.00 |
| 7- | طریق السلوک فی آداب الشیوخ | 300.00 |



## پروفیسر حافظ عبد الرزاق صاحبؒ

| | | |
|---|---|---|
| 1 - | انوار التنزیل | 25.00 |
| 2 - | چراغ مصطفوی ﷺ | 35.00 |
| 3 - | اطمینان قلب | 60.00 |
| 4 - | تصوف و تعمیر سیرت (اردو) | 60.00 |
| 5 - | تصوف و تعمیر سیرت (انگلش) | 120.00 |
| 6 - | کس لئے آئے تھے (اردو) | 25.00 |
| 7 - | کس لئے آئے تھے (انگلش) | 25.00 |
| 8 - | بزم انجم | 40.00 |
| 9 - | عظمت صحابہؓ | 10.00 |
| -10 | ذکر اللہ (اردو) | 15.00 |
| -11 | لغزشیں | 5.00 |
| -12 | مغالطے | 30.00 |
| -13 | ٹھوکریں | 20.00 |
| -14 | قرآن حکیم اور دعوت و تبلیغ | 15.00 |
| -15 | فقہ اور ہماری زندگی | 5.00 |
| -16 | والناس | 20.00 |
| -17 | خدایا ایں کرم بار دگر کن | 25.00 |
| -18 | تصوف کی پہلی کتاب | 50.00 |
| -19 | تصوف کی دوسری کتاب | 70.00 |
| -20 | تصوف برائے انٹرمیڈیٹ | 100.00 |
| -21 | دین و دانش | 25.00 |
| -22 | اسلامی تہوار | 10.00 |



قَدْ أَفْلَحَ مَن تَزَكَّىٰ وَذَكَرَ اسْمَ رَبِّهِ فَصَلَّىٰ

நிச்சயமாக தன்னைப் பரிசுத்தம் செய்து
கொண்டவர் வெற்றி பெற்றார். மேலும் அவர்
(யாரென்றால்) தன் இரட்சகனின் திருப்பெயரை
திக்ர் (தியானம்) செய்து கொண்டும்,
தொழுது கொண்டும் இருப்பார்.

( அஃலா 87 –14–15 )

நபி (சல்) அருளியுள்ளார்கள்.
“ஒவ்வொரு பொருளையும் சுத்தம் செய்வதற்கு
ஒரு சாதனம் இருக்கிறது இதயத்தை அல்லாஹ்வின்
திருப்பெயரைக் கொண்டுதான் சுத்தம் செய்ய முடியும்.”

( நூல்–பைஹகீ )